2.2.92
3.00

# கல்கி

பொன்விழா
ஆண்டு




வடசென்னைச் சிறப்பிதழ்:

## நம்மோடு தொகுதிக்கு வந்த அமைச்சர்!

"Yes! Mein Tumhe Super Snowcem He De Raha Hoon. Jyada Biknewala, Jyada Tiknewala **Super Snowcem**."



*W*e have been hearing this conversation for over 30 years. Super Snowcem has been and still continues to be the first choice of the public, architects, builders, painters and dealers.

**SUPER SNOWCEM***

India's No.1 Cement Paint.




• Durable • Protective • 31 Decorative Shades

**Snowcem India Ltd.** Killick Estate, Baji Pasalkar Marg, Chandivali, Bombay - 400 072.
Tel.: 578 1482 (7 lines) • Ahmedabad - 352052, Bangalore - 572308, Calcutta - 304200, Cochin - 366583, Jaipur - 61714, Kanpur - 212461, Madras - 869301, New Delhi - 312511, Secunderabad - 842788.

***Call or write today for a free shade card.***

* Manufactured under licence from Blue Circle Industries Ltd. U.K.

VENTURE DIRECT • ADMARCT 91004



# பர்மா பஜார் ஒரு மாயா பஜார்!

சமீபத்தில் ஒரு பத்திரிகை புகைப்பட நண்பர் பர்மா பஜாரில் ஐந்து கோடக் பிலிம் ரோல்கள் வாங்கினார். பக்கா ஒரிஜினல் பேக்கிங். ஆனால் உபயோகித்த போது ஒவ்வொரு ரோலிலும் ஐந்து ப்ரேம்களே, இருப்பது தெரிய வந்தது.

- வாரங்கல்லில் இருந்து வந்து கலர் டீ.வி. வாங்கிக் கொண்டு போனார் வெங்கோப ராவ். ஊருக்குப் போய்ப் போட்டுப் பார்க்கும் போதுதான், கலர் டீ.வி. பெட்டிக்குள் கறுப்பு - வெள்ளை டீ.வி. மெக்கானிசம் இருப்பது புரியவந்தது.

- செங்கல்பட்டைச் சேர்ந்தவர் மனோகரன். ஒரு கடையில் ஸோனி டூ-இன்-ஒன்னைப் பார்த்து விட்டு பேக் பண்ணித் தரச் சொன்னார். ''ஸார் இது ஷோ பீஸ். கொடவுனில் நிறைய இருக்கு. அங்கேயிருந்து கொண்டு வர்றேன்' என்று, அழகாக பேக் செய்து கொண்டு வந்தார் கடைக்காரர். ஊருக்குப் போய்ப் பார்த்தால் உள்ளே செங்கல்.

இவ்வாறு வடசென்னையில் உள்ள பர்மா பஜாரில் ஏமாந்தவர்கள் எக்கசக்கம். வாங்கிய கடையிலேயே திரும்பவும் போய்க் கேட்டாலும், 'என் கடையில் வாங்கலே' என்று சாதிப்பார் கடைக்காரர். அவருக்கு ஆதரவாக ஒரு கூட்டம் சேரும். போலீஸ், மிரட்டல் என்று போனாலும் பலன் பூஜ்யம். ஆயினும் சென்னைக்கு வரும் சுற்றுலாப் பயணிகள், பர்மா பஜாருக்கும் விஸிட் செய்து ஏமாந்து கொண்டு தானிருக்கிறார்கள்.

இந்தக் கடைகள் எப்படித் தோன்றின?

1964-ல், பர்மாவில் இருந்து அகதிகளாக வந்த சிலர் கையோடு கொண்டு வந்திருந்த சாமான்களை பீச், ரயில்வே ஸ்டேஷன் ஓரம் தரையில் துண்டைப் போட்டு விற்க ஆரம்பித்தார்கள். இன்று 800 கடைகள் இருக்கின்றன. இவர்களுக்கு நான்கு சங்கங்கள் வேறு.

இங்கு ஒரிஜினல் பொருள்களை எப்படி வாங்குவது?

இந்தக் கேள்வியை இங்குள்ள ஒரு கடைக்குச் சொந்தக்காரரான மணிமொழியிடம் கேட்டோம்.

அவர் கேலியாகச் சிரித்து விட்டுச் சொன்னார்: ''உங்களுக்குத் தெரிந்த கடைக்காரர்களிடம் பொருள் வாங்க வேண்டும் அல்லது ஃபாரின் பொருட்களைப் பற்றி உங்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்க வேண்டும். கடைக்கு வெளியே இருக்கும் புரோக்கரை நம்பக் கூடாது. மேலும் 'கொடவுனில் இருக்கிறது' என்று உங்களைக் கூட்டிக் கொண்டு போனால் பின்னால் போக வேண்டாம். ஒரு பொருளை அவர் சொல்லும் விலையில் பாதிக்கு நீங்கள் கேட்டு, அவர் கொடுத்தால் அந்தப் பொருளின் தரத்துக்கு உத்தரவாதம் கிடையாது.''

''கஸ்டம்ஸ் கட்டுக் காவலை மீறி உங்களுக்கு ஒரிஜினல் பொருட்கள் எப்படிக் கிடைக்கின்றன?''

''பல பொருட்களை நாங்களே டூட்டி கட்டிக் கொண்டு வருகிறோம். வியாபாரிகள் என்றால் பல வழிகளைக் கையாளுவார்கள் என்பது உங்களுக்கு தெரியாதா?'' என்றவர், எல்லாப் பிஸினஸிலும் நல்லவர்கள் இருக்கிறார்கள்; மோசமானவர்களும் இருக்கிறார்கள். அதே போல் இங்குள்ள சில மோசமான வியாபாரிகளால் இந்த பஜாரின் பெயர் கெட்டுப் போய் விட்டது'' என்று வருத்தப்பட்டார்.

டெலிவிஷன், ரேடியோ, டேப் ரெகார்டர் என்று பல பொருள்களும் புகழ்பெற்ற அயல்நாட்டுக் கம்பெனிகளின் கூட்டுறவோடு இந்தியாவிலேயே நல்ல தரத்துடன் தயாரிக்கப்படும் போதும் மக்கள் ஏனோ அயல்நாட்டு மோகம் கொண்டு அலைகிறார்கள். இப்படிப்பட்டவர்கள் இருக்கும் வரை மோசடி வியாபாரமும் கொழிக்கும்.

**- தில்லப்பா**

# அரிசி விலையைக் குறைப்பது எப்படி?

"ஒவ்வோர் ஆண்டும் 12% முதல் 15% மட்டுமே அரிசி விலை உயர்ந்து வந்திருக்கிறது. ஆனால் இந்த ஆண்டு மட்டும் 30% விலை உயர்வுக்குக் காரணம் இருக்கிறது'' என்று காரணத்தை விளக்குகிறார் கே. ஆறுமுகசாமி; சென்னை நகர நெல் மற்றும் அரிசி மொத்த வியாபாரிகள் சங்கத் தலைவர்.

''வெளியில் இருந்து வருகின்ற அரிசியில் பெருமளவு தருகின்ற ஆந்திர மாநிலம், எப்போதும் நம் அரிசி விலையில் கிலோவுக்கு ஒரு ரூபாயிலிருந்து ஒன்றரை ரூபாய் வரை குறைவாகவே வைத்திருக்கும். ஆனால் இந்த ஆண்டு ஆந்திராவும் தமிழகத்தில் விற்கின்ற விலையையே தங்களுடைய விற்பனை விலையாக அறிவித்து விட்டது. போதாததற்கு, ஆந்திர அரிசியே மூன்று மடங்கு விலைக்கு, பங்களாதேசிற்குக் கடத்தப்படுவதால், சென்ற ஆண்டு வந்த அரிசி அளவு, இந்த ஆண்டு ஆந்திர அரிசி வரவில்லை.



கே. ஆறுமுகசாமி

''கடந்த ஆண்டை விட லாரி வாடகையில் 10 டன்னுக்கு ஆயிரம் முதல் ஆயிரத்தெண்ணூறு ரூபாய் வரை உயர்ந்திருக்கிறது. இது இன்னொரு காரணம். மத்திய அரசின் பொருளாதாரக் கொள்கை மாற்றத்தால் நாணய மதிப்பீட்டைக் குறைத்ததாலும், உரமானியத்தை நீக்கியதாலும், டீசல் விலை உயர்வாலும், கிராமப்புற விவசாயக் கூலி உயர்வாலும், தமிழக விவசாயியின் உற்பத்திச் செலவும் கூடி, நெல்லின் அடக்கவிலை அதிகமாக உயர்ந்து விட்டது.

''தஞ்சை மாவட்டம், அதைச் சார்ந்துள்ள காவிரியைப் பயன்படுத்தும் பகுதிகள் நீங்கலாக, மற்ற பகுதிகளில் ஆண்டுதோறும் 'லெவி'யாக அரசு கொள்முதல் செய்கிற நெல் ஒரு லட்சம் டன் மட்டும்தான். ஆனால் இந்த ஒரு லட்சம் டன் நெல்லுக்காக, ரெவின்யூ அதிகாரிகளும், சிவில் சப்ளைஸ் அதிகாரிகளும் ஒவ்வொரு தாலுகாவிலும், இரவு பகலாக அரசு ஜீப்களை வைத்துக் கொண்டு நெல், அரிசி வணிகர்களைக் கண்காணிப்பதற்காகச் சுற்றும் சுற்றலில் விரயமாகும் ஏராளமான பெட்ரோல் மற்றும் இதர செலவுகளை ஒப்பிட்டால், 'லெவி' கொள்முதல் எத்தனை அபத்தம் என்று புரியும். இதற்குப் பதிலாக, ஒரு லட்சம் டன் அரிசியை வெளி மாநிலத்திலிருந்து எளிதாக வாங்கி விடலாம். செலவும் குறையும். தமிழகத்தில் கட்டுப்பாடு நீங்கி, தாராளமாக நெல், அரிசி போக்குவரத்துக்கு அனுமதித்தால், வணிகர்களின் போட்டி மனப்பான்மையால், வெளிச் சந்தையில் நிச்சயம் கிலோவுக்கு ஒரு ரூபாய் வரை விலை குறையும்.

''அப்புறம், தமிழ்நாட்டில்தான், இந்தியாவிலேயே எந்த அரசும் செய்யாத அளவுக்கு, ஒன்றேகால் கோடி குடும்பங்களுக்கு அரசு பொது விநியோக அட்டைகளை வழங்கியிருக்கிறது. இதில் ஐம்பது சதவிகிதம் பேர் மண்ணெண்ணெய், சர்க்கரை வாங்க மட்டுமே இந்த அட்டைகளைப் பயன்படுத்துகிறார்கள். மீதியுள்ள 50 சதத்தில் சரி பாதி, போலி ஆட்கள். ஆக, 25 சதவிகித மக்களே குடும்ப அட்டையின் முழுப் பலனையும் அனுபவிக்கிற ஏழை நுகர்வோர். மீதி 75 சதவிகித மக்களுடைய உணவுப் பொருட்கள், முறையாக வாங்கப்படவில்லை என்றாலும் அவை உணவுப் பங்கீட்டுக் கடைகளிலோ, அரசின் கிடங்குகளிலேயோ, தேங்கி நின்று விடுவதில்லை. இந்த அத்தியாவசியப் பண்டங்கள் எல்லாம் உணவுப் பங்கீடு கடை நடத்துகிற ஊழியர்கள் மூலமாக, தவறான முறையில் போடப்பட்டு, வெளிச் சந்தையில் விற்கப்பட்டுக் கொள்ளை லாபம் அடிக்கப்படுகிறது.

''ஆக, அரசு பட்ஜெட்டில் மானியமாக 360 கோடி ரூபாயைப் பொது விநியோகத்துக்கு ஒதுக்கிய போதும், இதில் 90 கோடி ரூபாயே முறையான வழியில் (25% நுகர்வோரால்) பயன்பெறப்படுகிறது. மீதியுள்ள 270 கோடி ரூபாய் ஊழல் காரணமாக வீணாகப் போகிறது. எனவே, மிக உயர்ந்த சம்பளம் பெறும் ஐ.ஏ.எஸ். அதிகாரிக்கும் குடும்ப அட்டை, அவரது பணியாளுக்கும் குடும்ப அட்டை; பெரிய தொழிலதிபருக்கும் குடும்ப அட்டை, அவரது ஊழியருக்கும் குடும்ப அட்டை என்றில்லாமல், மற்ற மாநிலங்கள் போல் நலிவுற்ற மக்களுக்கு மட்டுமே குடும்ப அட்டையும், மானிய விலை உணவுப் பொருள்களும் வழங்க வேண்டும். குடும்ப அட்டைகளைக் குறைப்பதன் மூலமும் வெளிச் சந்தையில் கையிருப்பு உயர்ந்து, அரிசி விலை குறைய வாய்ப்பு உண்டு.

– சித்தார்த்



பின்னி மில் : எப்போது திறக்கப்படும்?

# பின்னி மில்: இருதரப்பு வாதங்கள்

கடந்த ஒரு வருடமாக மூடியிருக்கும் பின்னி ஆலை திறக்கப் படுமா? ''மில் நிர்வாகம், தொழிற் சங்கம், மாநில அரசு மூன்றும் முயன்றால் நிச்சயம் முடியும்'' என்கிறார்கள் நடுநிலையாளர்கள்.

''நிதி நிறுவனங்களிலிருந்து பெறப்பட்ட பங்குதான் பெரும்பான்மையாக இருக்கிறது. தனியார் போட்ட பங்குத் தொகை மிகவும் குறைவு. ஆனாலும் அவர்கள் கையில் நிர்வாகம்! இந்த நிலையில் மாநில அரசு, மத்திய அரசு ஆகியவற்றின் உதவியோடு தனக்கிருக்கும் அரசியல் செல்வாக்கினால் இந்த பாரம்பரிய மில்லை வெளியே கொண்டு போகப் பார்க்கிறது நிர்வாகம். பின்னர், கிட்டத்தட்ட 200 ஏக்கருக்கு மேல் இருக்கும் நிலத்தை பிளாட் போட்டு விற்று விட இருக்கிறார்கள். தொழிற்சாலைக்கு ஒவ்வொரு முறை நெருக்கடி வரும் போதும் விட்டுக் கொடுப்பது தொழிலாளர் வர்க்கம்தான். கடந்த 50 ஆண்டு கால வரலாற்றைப் பார்த்தால் மூவாயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் குறைக்கப்பட்டிருக்கிறார்கள். நிர்வாகத்தில் என்ன சிக்கல், எப்படி சரி செய்யலாம் என்று ஆராயாமல், எடுத்தவுடன் 'தொழிலாளர்கள் தியாகம் செய்ய வேண்டும்' என்று எதிர்பார்ப்பது சரியா?'' என்று தொழிலாளர் தரப்பில் வாதாடப்படுகிறது.

''இந்த ஆலை ஒரு வெள்ளை யானை. மிகவும் பழமையான இயந்திரங்கள். மற்ற ஆலைகளில், சமீபத்திய தொழில் நுட்பத்துடனும், குறைந்த ஆட்களுடனும், இந்த ஆலையை விட அதிகமாக உற்பத்தி செய்கிறார்கள். அவற்றோடு பின்னியால் போட்டி போட முடியவில்லை. மேலும் பிராஸஸிங் (சாயப் பிரிவு) பிரிவுக்குத் தேவையான நிலக்கரி, தண்ணீர் இடைப்பதில் பல சிரமங்கள்.

''புவனகிரிக்கு சாயப் பிரிவு கொண்டு செல்லப்படுமானால், தண்ணீருக்குப் பிரச்னை இல்லை. நிலக்கரிக்குப் பதில் காவிரிப் பகுதியில் கிடைக்கும் எரிவாயுவைப் பயன்படுத்திக் கொள்வோம். எந்த தொழிலாளரையும் வீட்டுக்குப் போ என்று நாங்கள் சொல்லவில்லை. 'புவனகிரிக்கு வருபவர்கள் வாருங்கள்; வராதவர்கள் இங்கேயே வேறு பிரிவுகளில் பணியைத் தொடருங்கள்' என்றுதான் சொல்கிறோம்!

''நிதி நிலையைப் பார்க்கையில் ஆட்களைக் குறைக்க வேண்டிய அவசியமும் இருக்கிறது. என்றாலும் தொழிலாளர்கள் யாராவது தாமாகவே விலகினால் நல்ல முறையில் அவர்களுக்கு settlement கொடுத்து அனுப்புவோம். இப்படியே இழுத்துக் கொண்டு போவது யாருக்குமே நல்லதல்ல. ஒரு நல்ல உடன்பாட்டுக்கு நாங்கள் தயாராகவே இருக்கிறோம். பின்னி மில் நிலத்தை நாங்கள் பிளாட் போட்டு விற்று விடுவோம் என்ற குற்றச்சாட்டுக்கு அடிப்படையே இல்லை. ஏனென்றால் பிராஸஸிங் பிரிவு தவிர மற்ற பிரிவுகள் சென்னையில்தான் தொடர்ந்து செயல்பட வேண்டும்'' என்கிறது நிர்வாகம்.

எட்டாயிரம் தொழிலாளர் குடும்பங்கள் பட்டினியால் வாடிக் கொண்டிருப்பதை அனைவருமே உணர்ந்து கொண்டு விரைவில் ஒரு முடிவுக்கு வந்தால்தான் நல்லது.

- கௌசல்யா

நம்மோடு
தொகுதிக்கு வந்த
அமைச்சர் :



# “என் கையில் இருப்பது அலாவுதீன் விளக்கல்ல...”

மக்கள் பிரதிநிதி ஒருவரை வட சென்னைக்குக் கூட்டிச் சென்றால் என்ன? என்ற எண்ணம் நமக்குத் தோன்றியது. ராதா கிருஷ்ணன் நகர்த் தொகுதியின் பிரதிநிதியான கைத்தறித் துறை அமைச்சர் மதுசூதனனிடம் நமது யோசனையைச் சொன்னதும், ''நாளை காலை வந்துடுங்க ஸார். ப்ராப்ளம் உள்ள பகுதிகளுக்கே போகலாம்'' என்று உடனடியாக ஒப்புக் கொண்டார்.

மறுநாள் காலையில் அமைச்சர் அறையில் நாம் ஆஜர். ஏகப்பட்ட மக்கள் காத்துக் கிடந்தனர். அவர்கள் எல்லோரிடமும் மளமளவென்று பேசி அனுப்பி விட்டு, நம்முடன் கிளம்பினார் அமைச்சர். கூடவே குடிநீர் வடிகால், குடிசை மாற்று வாரியம் மற்றும் மாநகராட்சி அதிகாரிகள்.

கார் வடசென்னைக்கு விரைந்து வண்ணாரப்பேட்டை பாலத்தைக் கடந்து, இடதுபக்கம் ரயில்வே கேட்டிற்குள் நுழைந்து, அந்த குடிசைப் பகுதிக்குள் புகுந்தது.

''இந்தப் பகுதிதான் போஜராஜன் நகர். சென்ற முறை வெள்ளம் வந்த போது அம்மாவே (ஜெ.) இங்கு வந்து பார்த்தாங்க'' என்ற அமைச்சர், அதிகாரிகளுடன் தெருவில் இறங்கி நடக்க ஆரம்பித்தார்.

☛ போஜராஜன் நகர் சாக்கடைப் பகுதிகளில் அமைச்சர்...



அந்தப் பகுதித் தெருக்களின் சாக்கடைக் கால்வாய்களின் நிலையை மாற்றுவதற்கான ஏற்பாடுகளும் அந்தப் பகுதி மக்களுக்கு இருநூறு குடியிருப்புகள் கட்டுவதற்கான திட்டமும் தயார் என்கிற நிலையில், அதற்கான நில ஆர்ஜித வேலை நடந்து கொண்டிருப்பதையும் நம்மிடம் விளக்கிக் கொண்டே வந்த அமைச்சரைச் சுற்றிலும் கூட்டம் கூடி விட்டது.

''எனக்கு டோக்கன் கொடுக்கலை!'' என்று கூட்டத்திலிருந்து சில பெண்கள் குரல் கொடுத்தனர்.

''யார் அது?'' என்று திரும்பிப் பார்த்தார் அமைச்சர்.

ஒரு பெண்மணி அருகே வந்தார். ''நான் வாடகை வீட்டில் இருக்கேன். எனக்கு டோக்கன் கொடுக்கலை. பணம் (வெள்ள நிவாரணம்) எப்படிக் கொடுப்பாங்க?'' என்று கத்தினார்.

''தெ... சும்மா இரு. கத்தாதே! டோக்கன் வாங்கித் தரணும் அவ்வளோதானே! உனக்கு என்னா தரப் போறான். நூறு ரூபாய். இதுக்கு ஏன் கத்தறே? உனக்கு வூடே கட்டித் தரப் போறாங்க, அம்மா...''

''நீ... ஒன்னுண்ணா... எல்லாரும் வாங்கும் போது நான் மட்டும் வாங்காம இருக்கணுமா?''

அந்தப் பெண்மணியின் கையை ஆறுதலுடன் பிடித்துக் கொண்டார் அமைச்சர். ''எல்லாம் செய்துடறேன் போ!''

''ஏம்பா!'' என்று லோக்கல் வட்டச் செயலாளரை அழைத்து, ''இந்த டோக்கன் வராத கேஸெல்லாம் லிஸ்ட் எடுத்துட்டு நாளைக்கு வா'' என்று உத்தரவு கொடுத்தார் அமைச்சர்.

இரண்டடி எடுத்து வைத்திருப்பார் அமைச்சர். அவர் காலில் தடாலென்று விழுந்தார் ஒரு பெண்.

''எய்ந்துரு... எய்ந்துரு...'' என்று தூக்கி விட்டார் அமைச்சர்.

''வூட்டுக்காரர் மேல செவுரு வுழுந்து கால்லே அடி. ஆஸ்பத்திரிலே கவனிக்க மாட்டேன்கிறாங்க. அங்க டாக்டரு யாரும் இல்லை...'' என்று கைகூப்பினார் அந்தப் பெண்மணி.

உடனே அமைச்சர் உதவியாளரிடமிருந்து லெட்டர் பேடை வாங்கி, நின்றபடியே கைப்பட ஸ்டான்லி மெடிகல் ஆஸ்பத்திரி ஆர். எம். ஓ. க்கு லெட்டர் எழுதி பொறுப்பான ஒருவரிடம் கொடுத்து அனுப்பி வைத்தார்.

அதற்குள் ''அண்ணா'' என்று குரல் கேட்டது. ''இத பாருண்ணா... போலீஸ்காரன் எப்டி அடிச்சுட்டான் பாத்தியா?''

''எப்படிடா?'' என்றார் அமைச்சர்.

''வேஷ்டி, சேலை வாங்கறதுக்கு தாசில்தார் ஆபீஸ் போனேனா... பொறம் போக்குங்க... தடியாலே அடிச்சு விரட்டிட்டாங்கண்ணா'' - என்று கதறினார் அந்த வாலிபர்.

''டேய். டேய் அழாதேடா...'' என்று சமாதானப்படுத்தினார் அமைச்சர்.

''தெரியாத்தனமா தாசில்தார் அலுவலகத்தில் கொடுங்கன்னு சொல்லிட்டாங்க. அதில் பிரச்னைன்னதும் அம்மா மாத்திட்டாங்க. ரேஷன் கடையில் கொடுக்கச் சொல்லிட்டாங்க....'' என்றார் நம்மிடம்.

''அண்ணே கொஞ்சம் சீனிவாச



☛ நின்றபடியே சிபாரிசுக் கடிதம்

நகருக்கும் வந்துட்டுப் போங்க'' என்றார் லோக்கல் செயலாளர். ''சரி...'' என்று நடந்தார் அமைச்சர்.

தூரத்திலிருந்து ஓடி வந்த ஒருவர் ''ஐயா தெரு லைட்டே எரிய மாட்டேன்னுதுங்க...''

''சாராயம் விக்கறவன் வெளிச்சம் இருக்கக் கூடாதுன்னு தெரு லைட்ட உடைச்சுடறான். இது மாதிரி ஆளுங்களை தயவு தாட்சண்யம் பாக்காம உள்ளே போடுங்க'' என்றார் அருகிலிருந்த இன்ஸ்பெக்டரிடம்.

மிலிட்டிரியிலிருந்து லீவில் வந்திருந்த சிப்பாய் ஒருவர், ''ஒரே கொசுத் தொல்லை ஸார். பின்னாடி

ஓடற சாக்கடைக் கால்வாயை அடைச் சுட்டாப் பரவாயில்ல'' என்றார்.

''நோ... நோ... அது கூடாது. அதை அடைக்கச் சொல்லிட்டோம்னா கார்ப்ப ரேஷன்காரங்க கண்டுக்க மாட்டாங்க. குப் பைங்க சேர்ந்து காஸ் வரும். அது உயி ருக்கே ஆபத்து. இப்படியே இருக்கட்டும். அப்பப்பவாவது கிளீன் பண்ணுவாங்க'' என்றவர், கார்ப்பரேஷன் அதிகாரியைக் கூப்பிட்டு, ''மருந்தடிக்கச் சொல்லுங்க ஸார்...'' என்றார்.

ஒரு பழுத்த கிழவி அமைச்சர் அருகில் வந்து, அவர் கன்னத்தைத் தடவிக் கொடுத் தார். ''கண்ணு... போன தடவை வந்த போதே பட்டா கிடைக்கும். கவலைப்படா தேன்னு சொன்னே... ஒண்ணும் கிடைக் கலையேப்பா...''

அமைச்சர் அந்தம்மாவின் கைகளைப் பிடித்துக் கொண்டார். ''கண்டிப்பாக் கெடைக்கும் போ...''

''ஏதோ நீ சொல்ற, நான் போறேன். மறந்துறாதே...'' என்றபடி போனார் அந்தக் கிழவி.

அங்கிருந்து விடைபெற்று எழில் நகர் பகுதிக்கு வந்தோம். (வழியில் பேப்பர் பொறுக்கும் ஒருவரின் வீட்டில் ஓர் இழவு. காரை நிறுத்தி விசாரித்த அமைச்சர், ரகசிய மாகச் சம்பந்தப்பட்டவர்களிடம் பணம் கொடுத்து, ஈமக்கிரியைகளுக்குப் பயன் படுத்திக் கொள்ளச் சொல்லி விட்டு, ''பாவம், அவர்களிடம் இந்தச் சமயம் பணம் இருக்கிறதோ, இல்லையோ...'' என்றார்) வழியில் இந்தியன் ஆயில் கார்ப்ப ரேஷன் டிப்போவுக்கு எதிரில் போடும் சாலையைப் பற்றிக் குறிப்பிட்டார் அமைச்சர்.

''பெட்ரோல் கம்பெனிக்காரங்க, கார்ப்பரேஷன்காரங்க எல்லாரையும் பிடிச்சு உட்கார வைச்சு காரியத்தை முடிச் சிட்டு இருக்கோம். இல்லையென்றால் ரோடு போட்டு முடிஞ்சதும் கார்ப்ப ரேஷன்காரங்க ஏதாவது காரணத்தைச் சொல்லிப் புது ரோட்டைத் தோண்ட ஆரம் பிச்சுடுவாங்களே.... இன்னும் கொஞ்ச நாள்ல பக்கா ரோடு ரெடியாயிடும். 50 லட்சம் செலவு செய்யறோம்.''

எழில் நகர் பகுதி மிகவும் பள்ளமான பகுதி. சரியான சாலை வசதி, குடிநீர் வசதி இல்லாத பகுதி. ஆங்காங்கே ஸின்டெக்ஸ் டாங்க் வைத்துக் குடிதண்ணீர் சப்ளை செய் கிறார்கள். இந்தப் பகுதி மக்களுக்கு ஒரு பிரச்னை. நகருக்கு மிக அருகில் இந்தப் பகுதி இருந்தும் போலீஸ் ஸ்டேஷன், போஸ்ட் ஆபீஸ் போன்றவை செங்கை மாவட்டம் கொடுங்கையூர் லிமிட்டில்தான் வருகின்றன. இதனால் மக்களுக்கு ஏகப் பட்ட தொல்லைகள். திருட்டுப் பயம் இங்கு அதிகம் என்பதையும் அமைச்சரிடம் எடுத்துச் சொன்னார்கள். எல்லாவற்றையும் விட குழந்தைகளுக்கான ஆரம்பப் பள்ளி மிகவும் முக்கியம் என்று அவர்களிடம் எடுத்துச் சொன்ன அமைச்சர், அதற்கான ஏற்பாடுகளைச் செய்வதாகச் சொன்னார்.

அதற்குள் ஓர் இளைஞர் உரிமையுடன் ''தலைவா... பஸ்ஸுக்கு ஏதாவது ஏற்பாடு பண்ணு. ரொம்ப நடக்க வேண்டிதா இருக்கு'' என்றார்.

''சரிடா என்ன பண்ணணும்னு சொல்லு... இங்கேருந்து ஆரம்பிச்சு பரமேஸ்வரி நகர் போயி மிண்ட்டுக்கு வுட லாமா?'' - இது அமைச்சர்.

மக்களிடம் இருந்து ஏகப்பட்ட யோச னைகள் வரவே, அமைச்சர் லோக்கல் கட்சித் தலைவர்களிடம், ''எல்லோரும் சேர்ந்து பேசி ஒரு முடிவு பண்ணி என் கிட்டே கொண்டு வாங்கய்யா'' என்றபடி புறப்பட்டார்.

அப்போது ஒரு பெண்மணி தனக்கு ஜுரம் என்பதால் வேலைக்குப் போக வில்லை; அதனால் கஷ்டம் என்று சொல்ல, நூறு ரூபாயை எடுத்துக் கொடுத் தார் அமைச்சர்.

ரயில்வே பாலத்தைக் கடக்கும் போது, காரை நிறுத்தி, ''என்ன கிருஷ்ணவேணி?'' என்று ஒரு பெண்மணியைக் கூப்பிட்டார் அமைச்சர்.

''யண்ணா... வணக்கண்ணா!'' என்றார் அந்தப் பெண்மணி.

''ஒண்ணும் பிரச்னையில்லையே!'' என்று கேட்டபடியே காரை விடச் சொன்ன அமைச்சரிடம், ஒரு தொண்டர் ஓடோடி வந்து, ''தலைவரே இந்த இடம் வேஸ்டா இருக்கு. ஏதாவது காலேஜ் கட்டலாம்'' என் றார்.

''நல்ல யோசனைதான்'' என்ற அமைச்சர், உடன் வந்த அதிகாரிகளிடம் அந்த இடம் யாருக்குச் சொந்தம் என்பதைக் கண்டறியுமாறு கேட்டுக் கொண்டு, பரமேஸ்வரி நகருக்கு விரைந்தார்.

அங்கே மக்களுக்கு பட்டா பிரச்னை. பஸ் இல்லாததும் ஒரு குறை. இரட்டை இலைத் துண்டுடன் ஒருவர் ஆவேசமாகப் பேசினார்.

''நீ என்னா... ஒண்ணும் கவனிக்க மாட் டேன்றே. எவ்ளோ வருசமா இங்கு குடி யிருக்கோம்...'' என்று தொடர்ந்தவரை மடக்கினார் அமைச்சர். ''மெதுவாச் சொல் லுடா...''

''நீ என்ன... என்னைக் குடிகாரன்னு

தமிழ் வாசக அன்பர்களுக்கு அரிய விருந்து!

# அமுதசுரபி

பிப்ரவரி '92 இதழில்

- கவிஞர் பாப்ரியா எழுதிய ''நூல் மனிதர்கள்'' ரூ.5,000/- பரிசு பெற்ற தொடர் நாவல் ஆரம்பம்.
- ஜெயா வெங்கட்ராமன் எழுதிய ''விலை'' (ரூ.3,000/- பரிசு பெற்ற சிறுகதை.)
- ரா. கணபதி கட்டுரை.



மற்றும் சிறுகதைகள், கவிதைகள், கட்டுரைகள், அதிக பக்கங்கள், தனிப்பிரதி ரூ.5.

## 'முக்கனி'-திட்டம்

ரூ.3000 ஸ்ரீராம் டிரஸ்டில் முதலீடு செய்து ஆறு ஆண்டுகளில் ரூ.6000 பெறுவதுடன் ஒவ்வொரு மாதமும் அமுதசுரபி இலவசம். ஆறு ஆண்டுகளுக்குத் தீபாவளி மலர் இலவசமாய்ப் பெறுங்கள். 8 கிராம் வெள்ளிப் பதக்கப் பரிசும் உண்டு.

**அமுதசுரபி**
145, லிங்கிச் செட்டி தெரு.
சென்னை-600 001.
தொலைபேசி : 528545.

ADWAVES/ST/4154

---

## நேரிலும் தபாலிலும்.

- நீங்கள் S.S.L.C. தேர்ச்சி பெற்றவரா ?
- ஓவியம் வரைவதில் ஆர்வமுள்ளவரா ? உங்களை ஓவிய ஆசிரியராக ஆக்கியே தீருவோம்.
- அற்புதமான அஞ்சல் வழிப் பயிற்சி.
- அரசுப் பள்ளியிலும், தனியார் பள்ளியிலும் ஏராளமான வேலை வாய்ப்பு.
- நேர்முகப் பயிற்சியும் உண்டு.

கல்வித்தகுதி : SSLC, +2, தேறிய, தவறியவர்கள்

## உடனே வேலை பெற...



# ஓவிய ஆசிரியர் பயிற்சி





விண்ணப்பிக்கவும்.

AJANTHA SCHOOL OF ARTS
(GOVT. REGD. No.1075/89/M.S./RD)
67, ANJANEYAR KOIL STREET,
POONAMALLEE, MADRAS-600 056.

# சமாதானம் வளர சைக்கிள் பயணம்

"சண்டையும் சச்சரவும் மிகுந்த இக் காலத்தில், சமாதானத்தையும் சகோதரத்துவத்தையும் வலியுறுத்தும் விதத்தில் சென்னையிலிருந்து கன்னியாகுமரிக்கு, 13 இளைஞர்கள் சைக்கிள் பயணம் போனோம், டிசம்பர் மாதக் கடைசியில்" என்றனர் சதீஷ்மோகனும் பிற இளைஞர்களும். இவர்கள் வட சென்னை, புதுவண்ணை இளைஞர் சமூக நலச் சங்கத்தைச் சேர்ந்தவர்கள்.

ஆறு நாள் ஆயிற்றாம் போய்ச் சேர. பதின்மூன்று சைக்கிள்களும் நன்கொடையாகக் கிடைத்து விடும் என்று எதிர்பார்த்திருந்தும், ஆறு சைக்கிள்களே கிடைத்தன. ஆயினும் திட்டமிட்டபடி 13 பேர் கிளம்பி விட்டனர். தினம் சராசரி 130 கி.மீ. சைக்கிள் மிதிக்க, வழியெங்கும், நல்லெண்ணத்தோடு வரவேற்றனர் மக்கள். தங்குவது போலீஸ் ஸ்டேஷனில். "கோயில்பட்டியில் மட்டும்தான் சற்று கசப்பான அனுபவம். இன்ஸ்பெக்டர் சற்றும் கண்டுகொள்ளாமல் அலட்சியம் செய்தார். ஆனால் காவலர்கள் இரவு விழித்திருந்து சைக்கிள்களைக் காவல் காத்துக் காலையில் அன்போடு விடைகொடுத்தார்கள்!" என்றார் சதீஷ்.

பரிசாகக் கிடைத்த சைக்கிள்களை, குழுவில் வேலையில்லாத, வசதியற்ற இளைஞர் ஒருவருக்கு, வாடகை சைக்கிள் கடை வைத்துக் கொள்ள அளித்து விடுவது என்று முடிவு எடுத்திருக்கிறார்கள் இந்த இளைஞர்கள்.

அருகே உள்ள கோயிலைச் சீராக்கி, சமீபத்தில் கோலாகலமாக இசை நிகழ்ச்சியும் வழங்கினார்களாம். "முக்கியமான செய்தி இதில் என்ன என்றால், ஒரு முஸ்லிம் இளைஞரும், ஒரு கிறிஸ்தவ இளைஞரும் எங்களது இந்த முயற்சியில் ஈடுபாட்டோடு ஒத்துழைத்து எங்களுக்கு உதவியதுதான்!" என்கிறார் சதீஷ்.

- நம்பி

---

சொல்லுவே.. சொல்லிகினு போ... எனக்குக் காரியம் நடக்கணும்... 'செய்யறேன்'னு சொல்லிட்டுப் போண்ணா..."

"டேய்.. நான் செய்யாம யாரு செய்வாங்கடா?" என்றபடி காரில் ஏறினார் அமைச்சர்.

அமைச்சர் பொது மக்களிடம் பந்தா இல்லாமல் அவர்களில் ஒருவராகப் பழகினார். உரிமையுடன் மிரட்டி, கனிவாகப் பேசி, கைகளைப் பிடித்துக் கொண்டு நெருக்கத்தைப் பிரதிபலித்துப் பேசியது ஆச்சரியம் என்றால், தமிழ், தெலுங்கு, ஹிந்தி, உருது, மலையாளம் என்று அவரவர் தாய்மொழியில் சரளமாகப் பேசியது அதைவிட ஆச்சரியம்!

"எல்லாம் வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ளவங்க. தினசரி 10, 15 சம்பாதிப்பவங்க. இவர்களால் பத்திரிகைகளுக்கு எழுதியெல்லாம் தங்கள் பிரச்னைகளைச் சொல்லத் தெரியாது. எல்லாவற்றுக்கும் என்னைப் போன்ற அரசியல்வாதிகளைத்தான் பூரணமாக நம்பியிருக்கிறார்கள்..." என்றார் அமைச்சர்.

அமைச்சருடன் வந்த அதிகாரிகள், உலக வங்கித் திட்டம், ஹட்கோ திட்டம் என்று ஏராளமான திட்டங்களை அந்தப் பகுதிகளில் நிறைவேற்ற இருப்பதாகச் சொன்னார்கள்.

"எல்லாம் உடனே நடந்துடாது. வீடு, குடிதண்ணீர் வசதி, கழிவுநீர் வசதி... இவைகளை உடனடியாகச் செய்து தரணும்னு நினைக்கறேன். அதிகாரிகளும் நன்றாக ஒத்துழைக்கிறார்கள். நானும் விஷயங்களை ஃபாலோ பண்ணிட்டு வர்றேன். என் கையில் அலாவுதீன் விளக்கு இல்லை. ஆனால் நிச்சயம் என் பதவிக் காலத்தில் இந்தப் பகுதிக்கான அடிப்படைத் தேவைகளைச் செய்வேன்" என்றார் அமைச்சர்.

- ப்ரியன்

அட்டை வண்ணப்படமும், வட சென்னை தொடர்பான மற்ற படங்களும் : யோகா



தீப்பிடிக்காத குடிசைகள்

# தீப்பிடிக்காத குடிசைகள்

**த**ண்டையார்பேட்டையில் சென்ற வாரம் சுமார் 400 குடிசைகள் எரிந்து சாம்பலாயின. சென்னையில் அடிக்கடி இப்படி நடக்கிறது. தவிர்க்க வழி என்ன?

குடிசை மாற்று வாரியம் அடுக்கு மாடிக் கட்டடம் கட்டித் தரலாம். செலவு மிகுதி என்பது ஒருபுறமிருக்க, புதிய அடுக்கு மாடிக் கட்டடங்களுடன் புதிய புதிய குடிசைகளும் தோன்றியவண்ணம் உள்ளன.

இந்த அடுக்கு மாடிக் கட்டடங்கள் அமைப்பில் தரம் மிகக் குறைவு; லஞ்ச ஊழல் மிக அதிகம் - யாவரும் அறிந்ததே. இதனால்தான் அண்ணா குடிசை வாழ்வோருக்கு இலவசமாக, அல்லது குறைந்த விலைக்கு அஸ்பெஸ்டாஸ் ஓடுகள் மட்டும் வழங்கலாம் என்று ஒரு திட்டம் வகுத்தார். அது போன இடம் தெரியவில்லை. சுயநலமிகள் திட்டத்தை ஓரம் கட்டி விட்டார்கள்.

நகர்ப்புறங்களுக்கு வேலை தேடி வருவதைக் குறைக்கலாம். இதற்குக் கிராமப்புற மேம்பாட்டுத் திட்டங்களைக் கவனித்து, அங்கே வேலை வாய்ப்புக்கள் பெருகச் செய்ய வேண்டும். பிழைப்புத் தேடி நகரங்களுக்குக் குடிபெயரத் தேவையில்லை என்ற நிலை உருவாக வேண்டும். இதை மத்திய மாநில அரசுகள் கவனிப்பதாய்த் தெரியவில்லை.

சரியான கல்வித் திட்டத்தின் மூலம், அஜாக்கிரதை காரணமாக விபத்துக்கள் ஏற்படுவதைக் கணிசமாகக் குறைக்க முடியும். ஆனால் படிப்பறிவு இல்லாதவர் எண்ணிக்கையை உயர்த்துவதில்தான் அரசு சாதனை நிகழ்த்துகிறது.

"குடிசைகள் தீப்பிடித்து எரிவதைத் தடுக்க இன்னும் ஒரு எளிய, மலிவு வழியும் இருக்கிறது'' என்கிறார் பேராசிரியர் (டாக்டர்) டி. அனந்தராஜன். இவர் அண்ணா யூனிவர்சிடியில் நகர்ப்புற விஞ்ஞானத் துறைத் தலைவர். பிராந்திய, வீட்டு வசதி மேம்பாட்டு மையத்தின் இயக்குனர். ரூர்க்கியில் உள்ள கட்டட ஆராய்ச்சி நிலையத்தினர் கண்டுபிடித்துள்ள இந்த வழிக்குத் தேவையான மூலப் பொருள்கள் : மண், சன்னமாக நொறுக்கப்பட்ட புல் அல்லது வைக்கோல், சாணம், தார், மண்ணெண்ணெய், மெழுகு, தண்ணீர் ஆகியவைதாம்.

இவற்றைக் குறிப்பிட்ட அளவுகளில், குறிப்பிட்ட முறையில் கலந்து தயாரிக்கப்படும் கலவையை ஓலைக் கூரையின் மேலும் கீழுமாகச் சிபாரிசு செய்யப்படும் விதத்தில் பூசி விட்டால், ஆறு முதல் எட்டு ஆண்டுக் காலம் தீப்பிடிக்காத கூரைக்கு உத்தரவாதம்! கூரையின் மூங்கில், ஓலை, சணல் கயிறு பகுதிகள் அனைத்திலும் பூச வேண்டும்.

''இதன் தயாரிப்பைத் திட்டமிட்டு, சில நிபுணர்களின் மேற்பார்வையில் எளிதாக நடத்திக் காட்டலாம். கூரையில் பூசும் போதும் விஷயமறிந்தவர்கள் அருகில் இருந்து கவனிக்க வேண்டும்'' என்கிறார் அனந்தராஜன்.

அனந்தராஜன்



எத்தனையோ சங்குகள் ஊதப்படுகின்றன; விடியலைத்தான் காணோம்!

- திருபர்




சார்மினார் சானல் :

## ஜெயின் ஹைதராபாத் விசிட்!

சென்னைவாசிகளுக்கு 1995 - இல் தெலுங்கு கங்கை நீர் கிடைக்க ஜெயலலிதா ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். செக்யூரிட்டியைக் காரணம் காட்டிப் பத்திரிகையாளர் கூட்டத்தைக் கூட்ட மறுத்தார். தெலுங்கு கங்கைப் பேச்சு ஒரு நாள் என்றாலும், அதற்கடுத்த மூன்று நாட்களும் இரகசியமாக இங்கேயே இருந்தார். பலத்த போலீஸ் காவல். காவிரி நீர் போல தெலுங்கு கங்கை நீரும் பிரச்னையாகி விடக் கூடாதே என்று உள்ளூர பயப்படுகிறார்கள் தமிழர்கள்.

### மிரட்டப்படும் பத்திரிகையாளர்கள்!

●● குலாம் ரசூல் என்ற பத்திரிகையாளர் ''என்கௌண்டர்'' என்ற பெயரில் கொல்லப்பட்ட பின் அரசு, பிரதமர் சம்பந்தமான விழாக்களைப் பத்திரிகையாளர்கள் புறக்கணித்தனர். பத்திரிகையாளர்கள் குடியிருப்புகளில் போலீஸின் ''வகை வகையான'' விசாரணைகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. பல பத்திரிகை அலுவலங்களுக்கு மிரட்டல் டெலிபோன் செய்திகள்; ''உங்களையெல்லாம் கொல்ல சில விபத்துக்கள் போதும்; சில வெடிகுண்டுகள் போதும்'' என்றபடி. மனிதச் சங்கிலி, ஆர்ப்பாட்டம் என்று பத்திரிகையாளர்கள் இதனை எதிர்க்கிறார்கள்!

### அபாயத்தில் ஹைதராபாத்!

●● ஹைதராபாதும் இன்னொரு போபால் ஆகிற சூழ்நிலைகள் அவ்வப்போது தென்படுகின்றன. 'நியூக்ளியர் ப்யூவல் காம்ப்ளக்ஸ்' என்ற நிறுவனம் இந்த பயத்தை உண்டாக்கி வருகிறது. செக்கந்திராபாத்தை ஒட்டின இந்த அரசு நிறுவனத்திலிருந்து வெளியாகும் கழிவுநீரைக் குடித்ததால் ஆடு மாடுகள் சாவு; கழிவுப் பொருட்களைக் கிளறும் சிறுவர்கள், பெண்கள் தீப்பிடித்துக் காயம் போன்றவை பலமுறை நடந்து விட்டன. கதிரியக்கம் குறைப் பிரசவங்களை உண்டுபண்ணுகின்றது. இப்போது 520 கோடி ரூபாயில் இந்நிறுவனம் விரிவுபடுத்தப்பட உள்ளது. சுற்றுச் சூழல் பாதுகாப்பை வேண்டுகிறவர்கள் தொடர்ந்து போராட்டங்களில் ஈடுபட்டுள்ளார்கள்.

### நிஜாமிடம் பின்வாங்கிய அரசு!

●● கடைசி நிஜாமின் பேரன், முக்கரம்ஜா. ஆஸ்திரேலியாவில் இருக்கும் இவர், சில வருஷங்கள் முன் 13 கிலோ எடையுள்ள ஜகாங்கீர், ஷாஜகான் காலத்துத் தங்க நாணயம் ஒன்றை இந்தியாவிலிருந்து கடத்திச் சென்று சுவிட்சர்லாந்தில் விற்றிருப்பதாகத் தகவல். அந்த நாணயத்தைத் தேடும் முயற்சியில் அரசு உள்ளது. சென்ற ஆண்டில் ஜா துருக்கிய மாடல் பெண்ணை மணந்து கொண்டுள்ளார். நில உச்சவரம்புச் சட்டத்தின் கீழ் நகரின் ஒதுக்குப்புறத்திலிருந்த இவரின் தோட்டமொன்றைப் பூங்கா ஆக்கும் திட்டத்தின்படி, சமீபத்தில் அரசு ஆர்ஜிதம் செய்ய முயன்ற போது ஜாவின் ஆதரவாளர்கள் கடுமையாக எதிர்த்தார்கள். மதக் கலவரத்திற்கு இட்டுச் செல்லும் என்று பயமுறுத்தினார்கள். அரசு பின்வாங்கி விட்டது.

### வித்தியாசமான பந்த்

●● தெலுங்கானாப் பகுதியில் நக்சலைட்டுகள் வைத்ததுதான் சட்டம். அங்கெல்லாம் அரசின் போலீஸ், நீதித் துறை செயலற்று விட்டன. நக்சலைட்டுகளின் பிரஜா கோர்ட்டுகள் சரியான நியாயம் வழங்குவதாயும், பாதுகாப்பதாயும் பொது மக்கள் கருதுகிறார்கள். விலையைக் கூட நிர்ணயம் செய்கிறார்கள். வியாபாரிகள் மீறுவதில்லை. ''நக்சலைட்டுகள் எப்படி உங்களைச் சந்திக்கிறார்கள், யார் யார்?'' என்ற விவரங்களை அறிய வியாபாரிகளைப் போலீஸ் துன்புறுத்துகிறது. இதை எதிர்த்துச் சமீபத்தில் வியாபாரிகள் ஒருநாள் பந்த் அனுஷ்டித்தார்கள். வித்யாசமான பந்த்!

- அப்பன்

பம்பாய்க் கடிதம் :

# இ.காங்கிரஸில் கோஷ்டிச் சண்டை!

தமிழ் நாட்டைப் போலவே மகாராஷ்டிரத்திலும் காங்கிரஸ் கட்சியில் கோஷ்டிச் சண்டைகள் வெளிப்படையாவே ஆரம்பித்துள்ளன. மகாராஷ்டிர காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் பாடீல் நிலகாங்கர், பவார்-நாயக் கோஷ்டியால் ஓரங்கட்டி வைக்கப்பட்டிருக்கிறார். ஆனால் இவருக்கு மத்திய உள்துறை அமைச்சர் சவான் முன்னாள் மகாராஷ்டிர முதல்வர் அந்துலே ஆகியோரின் ஆதரவு உண்டு. வரும் எம்.பி.சி.சி. தலைவருக்கான தேர்தலில் நிலகாங்கர் போட்டியிட விரும்புகிறார். ஆனால் பவார், நாயக் இவர்களின் ஆதரவு சிவாஜி ராவ் கிரிதார் படேலுக்கு! காங்கிரஸ் தலைமைச் செயலகம் டெல்லியிலிருந்து மோதிலால் வோராவை பம்பாய்க்கு அனுப்பிச் சமரச முயற்சியில் இறங்கி இருக்கிறது.

எஸ்.பி. சவான்



VS

அந்துலே



## டாக்டர்களின் ஸ்ட்ரைக் :

அறுபத்தாறு நாட்களாகத் தொடர்ந்து நடந்த மகாராஷ்டிர டாக்டர்களின் வேலை நிறுத்தம் அரசாங்கத்தின் காலங்கடந்த சமரச முயற்சிகளுக்குப் பின் வாபஸ் வாங்கப்பட்டது. சம்பளத்தை இரட்டிப்பாக்க வேண்டும் என்பது டாக்டர்களின் கோரிக்கை! ஆனால் அவர்களுக்கு ரூ. 500 உயர்வே கொடுக்கப்பட்டது. அப்படியும் இது டெல்லி, தமிழ் நாடு, கர்நாடகம், ஆந்திரம் போன்ற மாநிலங்களில் டாக்டர்கள் பெறும் ஊதியத்தைவிட மிகவும் குறைவு என்கின்றார்கள் டாக்டர்கள். இதனிடையே புத்தாண்டு சமயத்தில் கலப்படச் சாராயத்தைக் குடித்து, போதிய மருத்துவ உதவியின்றி மாண்டோர் பலர். சமரசப் பேச்சை ஒத்திப் போட்ட அரசாங்கம் இதுபோன்ற உயிர்ப் பலிகளைத் தவிர வேறு எதையும் சாதித்து விடவில்லை. (ஓரளவு பிராக்டீஸ் ஏற்பட்டு விட்டால் இதே டாக்டர்கள் பொது மக்களை எப்படிப் பிழிந்தெடுக்கிறார்கள் என்பது வேறு விஷயம்!)

நாயக்



சரத்பவார்



## பங்குமார்க்கெட்டின் உச்சநிலை :

மத்திய அரசு எஃகு விலைக்கான கண்ட்ரோலை எடுத்து விட்ட பிறகு, பம்பாயில் பங்கு மார்க்கெட்டின் விலைகள் 'மள மள' வென மலேரியா ஜுரம் போல் ஏறின! இதுவரை ஸ்டாக் மார்க்கெட் கண்டிராத அளவுக்கு விலைகள் உயர்ந்தன. பங்குகளின் மொத்த விலைகளைக் கணிக்கும் 'சென்சிடிவ் இன்டெக்ஸ்' அரசாங்கம் தன் கொள்கையை அறிவித்த இருநாட்களில் 2079.23 என்ற எண்ணிற்கு உயர்ந்தது. இதுவும் விலைவாசி போல் இன்னமும் ஏறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. பம்பாய் தலால் தெரு இன்று ஒரு கலகலப்பான பகுதியாகத் திகழ்கிறது! ஆனால் ஒன்று. மலேரியா ஜுரம் ஏறிய வேகத்தில் இறங்கவும் செய்யும்! பட்ஜெட் டுக்கு முன் ஒரு பெரிய சரிவை எதிர்பார்க்கலாம் என்கின்றனர் வி.அ. வட்டாரத்தினர்.

- ராஜீவி நரசிம்மன்

# வானதி வழங்கும் புதிய நூல்கள்

ரு. பை

**கல்கி**

மாந்தருக்குள் ஒரு தெய்வம் - I 47.00
மாந்தருக்குள் ஒரு தெய்வம் - II 40.00

**திருமுருக கிருபானந்த வாரியார்**

வாரியார் வழங்கும் கட்டுரைச் செல்வம் 25.00

**மு.மு. இஸ்மாயீல்**

வள்ளலின் வள்ளல் 28.00

**எஸ். எல். எஸ்.**

இந்துமதம் பதிலளிக்கிறது 40.00
இசை வழியே இறையருள் பெற்றவர்கள் 40.00

**முனைவர் சுந்தர சண்முகனார்**

பால காண்டப் பைம் பொழில் 25.00

**த. இராமலிங்கம்**

யாமறிந்த புலவரிலே... 20.00

**முரு.பழ. இரத்தினம் செட்டியார்**

கம்பன் உணர்த்தும் பரம்பொருள் நிலை 15.00

**சரோஜினி செல்லக்கிருஷ்ணன்**

கம்பன் கருத்துக் களஞ்சியம் 25.00

**பேராசியர் - மு. சாயபுமரைக்காயர்**

**- பேராசிரியை சா. நசீமாபானு**

இவர்கள் இன்று சந்தித்தால்... 9.00

**குரும்பூர் குப்புசாமி**

காஷ்மீர் 22.00
கல்கத்தா 18.00
காசி - இராமேசுவரம் 15.00
ஜெய்பூர் 18.00

**டாக்டர் நா. மகாலிங்கம்**

மனிதன் ஏழை மனிதனா? 37.00

**பாவலர்மணி சித்தன்**

பாவேந்தருடன் பயின்ற நாள்கள் 25.00

**குமரி அனந்தன் (தொகுத்தவர்)**

சிந்தனைப் பண்ணையில் பாரதிதாசன் (முதற் பகுதி) 25.00
சிந்தனைப் பண்ணையில் பாரதிதாசன் (இரண்டாம் பகுதி) 25.00

**வாண்டுமாமா**

தேதியும் சேதியும் 42.00

**ஏ. சுவாமிநாதன் (தொகுத்தவர்)**

ஸ்ரீ ஜயேந்திரர் பதிலளிக்கிறார் 17.00

**சுந்தர ராமசாமி**

ந. பிச்சமூர்த்தியின் கலை மரபும் மனித நேயமும் 20.00

**அருணா. நடராசன்**

கல்வி நெறிக்காவலர் நெ.து. சுந்தரவடிவேலு 12.00

**தி.சா. ராஜு**

நிகழ்ச்சிகள் நினைவுகள் 15.00

**நெமிலி. எழில்மணி**

அன்னை பாலாவின் அற்புதங்கள் 10.00

**ரா.சு. நல்லபெருமாள்**

இந்தியச் சிந்தனை மரபு 10.00

**சிவசங்கரி**

புதிய கோணங்கள் 20.00

★ தேவையான புத்தகங்களை வி.பி.பி. யில் பெறக் கடிதம் எழுதுங்கள். வி.பி.பி. தபால் செலவு தனி.

★ புத்தக வியாபாரிகளுக்கும், பள்ளி, கல்லூரி நூலகங்களுக்கும் தக்க கழிவு தரப்படும்.

விவரங்களுக்கு :

## வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு, தி. நகர்,
சென்னை - 600 017. போன் : 442810.

# தமிழகத்தின் தொழில்வளம் பெருகுமா?

தமிழக அரசின் புதிய தொழில் கொள்கையை அறிவித்திருக்கிறார் முதல்வர். இதற்கு முன்னதாகவே தொழில் வளர்ச்சிக்குத் தேவையான அடிப்படை வசதிகளைக் கவனிக்கவென்று (infrastructure) ஒரு புதிய நிறுவனத்தையும் உருவாக்கியுள்ளார். இவையெல்லாம் தமிழகத்தின் தொழில் வளர்ச்சியில் அவர் ஆர்வம் கொண்டிருப்பதை உணர்த்தும். ஆனால் ஆர்வத்துக்கும் ஆக்கபூர்வமான செயல்பாட்டுக்கும் இடைவெளி நிறையவே உண்டு.

'தொழில் வளப்பெருக்கத்தைக் கவனிக்கவென்றே உருவான 'ஸிப்காட்', 'ஸிட்கோ', 'டிட்கோ', 'டி-ஐ-ஐ-ஸி.' போன்றவை ஏற்கெனவே சாதிக்காத எதை, புதிதாக உருவாகியுள்ள "டாஸிட்" சாதிக்கப் போகிறது?' என்ற கேள்வி எழுகிறது. 'அப்படி இந்த 'டாஸிட்'தான் எதையோ சாதிக்கப் போகிறது எனில், ஏற்கெனவே உள்ள பல நிறுவனங்கள் எதற்கு? கலைத்து விடலாமே? அல்லது, குறைந்தபட்சமாக்கலாமே?' என்று சிக்கனக் கருத்து தோன்றவே செய்கிறது.

மத்திய அரசின் கொள்கை மாற்றத்துக்கு ஏற்ப, மாநில அரசின் புதிய தொழில் கொள்கையும் தனியார் துறைக்கு அதிக முக்கியத்துவம் தருகிறது. அரசுத் துறைத் தொழில்களில் நஷ்டம் ஏற்பட்டால் அவை மூடப்படும் அல்லது தனியார் துறைக்கு மாற்றப்படும் என்றும் தெரியவருகிறது. இது நல்ல கொள்கைதான் என்றாலும் நடைமுறையில் மத்திய அரசு போலவே மாநில அரசும் பல சிக்கல்களைச் சந்திக்க நேரும்.

ஒரு மாநிலத்தின் தொழில் வளர்ச்சி என்பது முக்கியமாக மின் உற்பத்தியுடன் சம்பந்தப்பட்டது. தமிழகத்தில் மின் உற்பத்தி ஆண்டுதோறும் ஜோக்குகளுக்கு இடமளிக்கும் மின்வெட்டுடன் கூடியது. புதிய மின் நிலையங்கள் தோற்றுவிக்கலாம்தான். இதற்குத் தனியார் துறைக்கும் ஊக்கம் அளிக்கப்படும் என்கிறது புதிய தொழில் கொள்கை. ஆனால் நீர் மின் நிலையங்கள் எனில், நதிகளை அதிகபட்சமாகப் பயன்படுத்தியாயிற்று. பருவ மழை பொய்த்தால் இவற்றில் மின் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. அனல்மின் நிலையங்கள் அமைக்க முடியாததற்குக் காரணம் இங்கு நிலக்கரி இல்லை. (மின் உற்பத்திச் செலவை அதிகரிக்கும் பழுப்பு நிலக்கரிதான் உள்ளது.) வெளிமாநிலங்களிலிருந்து கொண்டு வருவதில் செலவும் அதிகம்; போக்குவரத்து இடர்ப்பாடு வேறு. அணுமின் நிலையங்களுக்கோ ஏகப்பட்ட எதிர்ப்பு. கூடங்குளமும் இல்லை என்றாகி விட்டது.

எனவே, மின்சக்தி அதிகம் தேவைப்படாத இனங்களில் கவனம் செலுத்தித் தொழில்வளம் பெருக்க வேண்டும். எலெக்ட்ரானிக்ஸ், ரசாயன ஆலைகள் போன்றவை. உப்பளங்கள் இங்கு நிறைய உண்டு. ஆதலால் அதன் அடிப்படையில் தொழில்கள் உருவாக்கலாம். இரும்பு போன்ற கனிமப் பொருள்கள் தமிழகத்தில் அதிகம் இல்லாத நிலையில் விவசாயம், கால்நடை, கடலிலிருந்து அறுவடையாகும் அம்சங்கள் போன்றவற்றுக்கு முக்கியத்துவம் தர வேண்டும். பலரக தாவர எண்ணெய்கள், பழங்கள் பதப்படுத்துதல், மீன், இறால் உற்பத்தி, போன்றவை தவிர, தோல் ஏற்றுமதி நல்ல லாபம் தருவதாகும். ஆனால் இதில் சுற்றுச் சூழல் மாசுபடுவது மிகுதி. தோல் பதனிட ஒரு வட்டாரத்தை ஒதுக்கி அங்கு மட்டுமே அத் தொழில் நடக்க அனுமதி வழங்கப்பட வேண்டும்.

தென்னாட்டு நதிகள் இணைப்பு பாம்பே ஹை எரிவாயுக் குழாய் இணைப்பு முதலியன பகற்கனவாகவே இருக்கும் நிலையில், தஞ்சை மாவட்டம் கடலோரப் பகுதியில் கிடைக்கும் இயற்கை வாயுவையாவது வீணாக்காது மின் உற்பத்திக்கும் இதர பல தொழில்கள் தொடங்கவும் பயன்படுத்தலாம்.

திட்ட ஒதுக்கீட்டை மத்திய அரசு கணிசமாகக் குறைத்து விட்டது என்பதுடன் மத்திய அரசின் வரிக் கொள்கைகளும் தொழில் வளர்ச்சிக்கு உதவும்படியாக இல்லை. இத்தகைய சூழ்நிலையிலும் முதல்வர் போராடி தொழில் வளப் பெருக்கத்தில் கணிசமான வெற்றி கண்டார் என்றால் தயக்கமின்றிப் பாராட்டலாம்.



# கல்கி




1992
பிப்ரவரி 2
மலர் : 50
இதழ் : 27
பிரஜோத்பத்தி
தை 19

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



படம் : [illegible]

# கடலரிப்பிலிருந்து காப்பாற்றுங்கள்!

வடசென்னையில் உள்ள தாங்கல், திருவொற்றியூர்ப் பகுதி மக்களைப் பொறுத்தவரை முக்கிய கோரிக்கை : ''கடலரிப்பிலிருந்து எங்கள் பகுதியைக் காப்பாற்றுங்கள்'' என்பதுதான். கடந்த ஐம்பது வருடங்களில், கடல் கிட்டத்தட்ட இரண்டரை கி.மீ. தூரம் கரையைக் கபளீகரம் செய்திருக்கிறது. ''போகிற போக்கில் எங்கள் பகுதியே இல்லாமல் போய் விடுமோ என்ற பயம் இப்போது தோன்றியுள்ளது'' என்கிறார் தாங்கல் இஸ்மாயில்.

''இந்தப் பகுதியில் மட்டும் கடல் இப்படி ஆக்ரோஷமாகக் கரையை அரிப்பதற்குக் காரணம், துறைமுகப் பகுதி விரிவாக்கமும், மீன்பிடி துறைமுகமும்தான். அந்தப் பகுதிகளில் அலை கட்டுப்படுத்தப் பட்டிருப்பதால், இரட்டை வேகத்துடன் இந்தப் பகுதியைத் தாக்குகின்றன'' என்கிறார் இஸ்மாயில்.

''கடலை ஒட்டினாற்போலச் செல்லும் எண்ணூர் ரோடு அடிக்கடி கடலரிப்பினால் பாதிக்கப்படுகிறது. அந்தச் சமயத்தில், மந்திரிகளும் எம். எல். ஏ.க்களும் வந்து போட்டோ, பேட்டி என்று கொடுப்பதோடு சரி; அடுத்தபடி கடலரிப்பு வரும் போதுதான் மீண்டும் வருவார்கள்'' என்று சாடுகிறார் திருவொற்றியூர் கோபால்.

மணலி, மற்றும் எண்ணூரில் உள்ள பெரிய பெரிய தொழிற்சாலைகளை நகரோடு இணைத்திருக்கும் முக்கிய சாலை, எண்ணூர் ரோடு. கடலுக்கும் கரைக்கும் நடுவே பெரிய பெரிய கற்களைப் போட்டு வைத்திருக்கிறார்கள். ஆனால் கடலன்னைக்குக் கோபம் வந்தால், கற்களையும் மீறிச் சீறுகிறாள்.

''நிரந்தரமாகக் கடலரிப்புத் தடுப்புச் சுவர் ஒன்றைக் கட்டினால்தான் பிரச்னை தீரும். ஆனால் இதற்கு அதிகமாகச் செலவாகும் என்ற பட்சத்தில் வீணாக உள்ள நூற்றுக்கணக்கான வீராணம் குழாய்களைத் தடுப்புச் சுவர்களாக நிறுத்தலாம். செலவும் குறைவு'' என்கிறார் கோபால்.

''இந்தக் கடலரிப்பின் காரணமாக, சாலையின் கிழக்குப் பக்கம் (கடல் பக்கம்) குடியிருந்தவர்கள் சாலையிலேயே மேற்குப் பக்கம் குடிசை போட்டுக் கொண்டு விட்டதால், ஏற்கெனவே கடலரிப்பால் குறுகிய சாலையின் அகலம் மேலும் குறைந்து விட்டது. இதனால் போக்குவரத்து மிகுந்த சிரமத்துக்குள்ளாகிறது.

''பம்பாயில் கடலிலிருந்து நிலத்தை மீட்டுக் கட்டடங்கள் கட்டுகிறார்கள். இங்கு என்னடா என்றால் இருக்கும் நிலத்தையும் கடலுக்குக் காணிக்கையாக்கி விட்டு அரசு கைகட்டி நிற்கிறது'' என்கிறார் இஸ்மாயில்.

– ஆர். எஸ்.

## திருநெல்வேலி வாசகர்களே!

**கல்கி மார்ச் 1 - திருநெல்வேலி நகரச் சிறப்பிதழ்**

**பிப்ரவரி முதல் தேதி (1.2.92)யன்று காலை 10 மணி முதல், மாலை 3 மணி வரை, திருநெல்வேலியிலுள்ள ஜானகிராம் ஹோட்டலில் (மதுரை ரோடு) கல்கி ஆசிரியரையும், ஆசிரியர் குழுவினரையும் நேரில் சந்தித்துப் பேசலாம்.**

**– ஆசிரியர்**

# நெற்றியில் நடமிடும் கோலங்கள்



தீபா



கனகா



நித்யா



நந்தினி



நித்யா

● நாலு ரூபாய் முதல் நாற்பது ரூபாய் வரையில் பல்வேறு ரக ஸ்டிக்கர் பொட்டுகள் கிடைக்கின்றன... அவற்றை வாங்கி அவசரத்துக்கு ஒட்டிக் கொள்ளலாம்.

● கொஞ்சம் பொறுமை இருந்தால் இரண்டு மூன்று வண்ணங்களில், வடிவங்களில் ஸ்டிக்கர் பொட்டுகளைப் பயன்படுத்தி, உடைக்கு 'மாட்ச்' ஆக நெற்றியை அலங்கரிக்கலாம்.

● நிறைய பொறுமையும், நேரமும் இருந்தால் சிவப்பு, கறுப்பு சாந்துகளை உபயோகித்து நெற்றியில் விதவிதமான கோலங்களே வரைந்து கொள்ளலாம்.

வண்ணப்படங்கள் :

யோகா

பாஷன் பக்கம்

பச்சிளம் குழந்தையுடன் இருக்கும் ஒவ்வொரு தாய்க்கும் சிறிதளவு ஆதரவு தேவை. அதை அளிப்பதில் மிகச் சிறந்தவர் நீங்கள்தான். முக்கியமாக, உலகில் சிறந்த குழந்தை உணவான தாய்ப்பாலை அவள் உங்கள் குழந்தைக்குக் கொடுப்பதினால்.

உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் இன்றியமையாதது. மற்றும் தாய்ப்பாலூட்டும் அன்னைக்கு மகிழ்ச்சி இன்றியமையாதது. மனப்பாரம் மற்றும் மனச்சோர்வு பால் சுரப்பதை வற்ற வைக்கலாம். உலகில் சிறந்த குழந்தை உணவு உங்கள் குழந்தைக்கு மறுக்கப்படுவதை நீங்கள் காண விரும்புகிறீர்களா ?

ஆகையால், உங்கள் மனைவிக்கு உற்சாக மூட்டி மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்யுங்கள். பிரசவ சோர்விலிருந்து அவள் உடல் குணம் பெறவும் தாய்ப்பால் கொடுப்பது அத்தியாவசிய மாகும். மற்றும் அவளுக்கு ஓய்வு தேவை. தாய்ப்பால் நன்கு கொடுக்க அவளுக்கு இது உதவுகிறது. ஆகையால் உங்கள் இல்லத்தரசிக்கு துணையாக இருந்து அவளுடைய அன்றாட வேலைகளில் மகிழ்ச்சியுடன் பங்கு கொள்ளுங்கள்.

ஏனெனில், உலகில் சிறந்த குழந்தை உணவிற்கு அக்கறையுடன் செயல்புரியும் தந்தையின் உதவியும் தேவை.

## உலகில் சிறந்த குழந்தை உணவு ஒரு மகிழ்ச்சியான தாயிடம் உள்ளது

அமுல் இந்த அறிவுரையை ஒவ்வொரு இந்திய தந்தை மற்றும் அவருடைய குழந்தைக்கு அர்ப்பணிக்கிறார்கள்.

# டான் கலிலியோ

பத்மா ரவிசங்கர்

## 4

பிரகாஷின் மகிழ்ச்சியைக் கெடுக்க வந்த போன் போலும். திரும்பவும் ''என்னாச்சுப்பா?'' என்றான் கவலையில்.

''நம்ம சிட் பண்டுக் கம்பெனியிலிருந்து பணம் கொள்ளை போயிருச்சாம்!''

''இவ்வளவுதானா? நான் என்னமோ ஏதோன்னு பயந்துட்டேன் டாட்'' என்றான் நிம்மதியாக மூச்சு விடுதலை செய்து.

அந்தக் 'கமெண்ட்டில்' ராஜசேகர் முகம் மேலும் சிறுத்து விட, ''அப்படி அலட்சியமாச் சொல்லாதேப்பா. கஷ்டப்பட்டுச் சேர்த்த காசு. ஏழு லட்ச ரூபாயைத் தூக்கிட்டுப் போயிட்டாங்களாம். கொள்ளையடிச்சவன் யாரோ டான்கலிலியோவாம். ராஸ்கல். அவன் மட்டும் என் கையில கிடைச்சா....'' உக்கிரமாக உறுமினார்.

''அதுக்குப் போலீஸ் இருக்கு. உயிர் போற பிரச்னையா இது? ரிலாக்ஸ் டாட்'' என்றான் நிதானமுடன். ''எனக்கு உங்க மேல கவலை உண்டாகுது. இந்த வயசுல இவ்வளவு டென்ஷன் படலாமா? அதுவும் கேவலம் ஏழு லட்ச ரூபாய்க்காக. உங்க வசதிக்கு இது ஒரு சாதாரணத் தொகை. நாட் வொர்த் தி ஸ்டிரெயின் ரியலி...''

ராஜசேகர் பெருமூச்சு விட்டு விட்டு, ''உனக்குப் பணத்தின் அருமை தெரியலை பிரகாஷ். எனக்குப் பிறகு நான் சேர்த்த சொத்து அனைத்தையும் பொறுப்பில்லாம கரைச்சிருவியோன்னு கவலையாயிருக்கு மை சன்.''

அவன் அகன்ற பின் ராஜசேகர் வெகு நேரம் விசனமுடன் மோட்டு வளையை வெறித்துக் கொண்டிருந்தார்....

கிரைம் பிராஞ்ச் அஸிஸ்டண்ட் கமிஷனர் ஆஃப் போலீஸ் தேவதேவன் இளைஞர். துடிப்பானவர். திறமைசாலி. கூர்மையான பார்வை உடையவர்; புத்தி அதைவிடக் கூர்மை. உரம் வாய்ந்த உடல் உடையவர். நேர்மையான நெஞ்சாளர். நேரடித் தேர்வில் ஏசிபியாக உட்புகுந்தவர். டிபார்ட்மெண்டில் வெகு சீக்கிரத்தில் நல்ல பெயரை எடுத்திருந்தார்.

தற்சமயம் ஏசிபி தேவதேவன் குழப்பத்திலிருந்தார். எங்கிருந்து தொடங்குவது? எப்படிச் செய்யலாம்? தொடர்ந்த சிந்தனையில் 'டான் கலிலியோ' என்ற முகந் தெரியாத அந்த கிரிமினல் மேல் அவருக்கு 'அப்சஷன்' போலாகி விட்டது.

ஒரு 'விசேஷ' வேலையாக (வேட்டையாக) முதுமலைப் பக்கம் அனுப்பப்பட்டு, இரண்டு மாதம் கடின கேம்ப் முடிந்து, இன்று காலைதான் சென்னை திரும்பியிருந்தார். அவருக்குள்ள விடுப்பு உரிமையை ஏகாந்தமாக அனுபவிக்கலாம் என்று திட்டமிடுகையில் அவசர அழைப்பு - மேலிடத்திலிருந்து.

ஏதோ தலைபோகிற பிரச்னை போலும் என அவர் எண்ணிச் சென்றது சரிதான். டிஜிபி தலைமையில் டாப் பிராஸ் கூடியிருந்தது. அனைவரும் உயர் போலீஸ் அதிகாரிகள். தேவதேவன் விறைப்பானார். இவ்வளவு நாட்களாகப் பச்சையான மலைக்காட்டில் கஞ்சாக் கடத்தல்காரர்களைத் துரத்திப் பிடித்துக் கொண்டிருந்ததில் சென்னைக் குற்ற நிலவரம் தெரியாது போனதால் டிஜிபி உரையைக் கவனமுடன் செவிமடுத்தார்....

சென்ற மாதம் நடந்த நடிகர் ஆனந்த்குமார் கொலையில் உருப்படியாகத் துப்பு ஏதும் பெயரவில்லை. இருபது நாட்களுக்கு மேலாயிற்று ரெயின்போ நகர் பாங்க் கொள்ளை நடந்து. பிறகு தொழிலதிபர் ராஜசேகரின் சிட்பண்டில் ஏழு லட்சம் கொள்ளை. சென்ற வாரம் நிகழ்ந்த 'மூசா' நாட்டுத் தூதுவர் மர்ம மரணப் பின்னணி என்ன? கண்ணில் மண் தூவிய, கவனத்திற்கே வராத கடத்தல் சமாசாரங்கள். இன்னும் பைசலாகாத பல பழைய கேசுகள்...

சிங்க இலச்சினை முன்நிறுத்தி எல்லாக் குற்றங்களையும் நிகழ்த்துபவன் டான் கலிலியோ. போலீஸ் ரெக்கார்டுகளில் இதுவரை அவனைப் பற்றி



ஒரு தகவலில்லை; கை ரேகையில்லை; புகைப்படமில்லை. அவ்வளவு துல்லியம், ரகசியம் அவன் செய்கைகளில். அவன் செய்யாத குற்றமில்லை. காமா சோமா க்ரைம் ஒன்றுமில்லை. அவ்வளவும் முழுமையான முத்திரைக் குற்றங்கள்...

குற்ற ஏவலுக்கு அவனை அந்தரங்கமாக அணுகுபவர்கள் நெருப்பில் புடம் போடப்பட்ட பின்னரே அனுமதிக்கப்படுவதாகக் கேள்வி. அப்படியும் அப்பேர் வழிகளைப் போலீஸ் மோப்பம் பிடிக்க முயன்றால் உத்தரவாதமாக அவர்கள் பிணம் மிதக்கும்.

அவர்கள் கூட டானைப் பார்த்திருப்பார்களா என்பது சந்தேகம்தான். கலிலியோவின் குற்ற ஏணியில் எத்தனை மட்டங்கள் இருக்கிறது? தெரியாது. அந்தக் குற்றக் குழுவில் நம்பிக்கையான நான்கைந்து திறமைசாலிகளே இருப்பர் என்பது டிஜிபியின் ஊகம்.

பலமுறை அவனைப் பிடிக்க மும்முரமாக முயன்று முடியாமல் சோர்ந்து போனது உண்மைதான். அதற்காகக் கம்மென்றிருந்து விடுவது டிபார்ட்மெண்டிற்கு அழகல்ல. அதுவும் சமீப காலமாக அவன் குற்றங்கள் அதிகரித்து விட்டிருக்கின்றன. சமீபிக்கும் எலக்ஷன் மீது கண் வைத்துள்ள மந்திரி போட்டு வாட்டுகிறார். பத்திரிகைகள் எள்ளி நகையாடுகின்றன.

'அவமானமய்யா. அவமானம்' என்று சீறிச் சிவந்து சிறுத்த காவல் துறைத் தலைவர் முகம் தற்போதும் தேவதேவனுக்கு ஞாபகம் வந்தது.

கலந்தாலோசித்து இறுதியில் - துறையின் கீழ் மட்டத்தை எட்டாத - ஒரு சிறு குழு அமைக்க முடிவு செய்தார்கள். ஏனெனில் கலிலியோ விசுவாசிகள் இருக்கலாம் என்று அஞ்சப்பட்டது.

குழுவில் பிரதானமாக இருவர் : டிசிபி சண்முகநாதனும், ஏசிபி தேவதேவனும். வேறு கேஸ் எதிலும் பட்டுக் கொள்ளாமல் இருவரும் இடைவிடாது அமைதியாக விசாரணை செய்ய வேண்டுமாம். வேண்டிய உதவிகள், வசதிகள் தருவதாக உறுதியளிக்கப்பட்டது.

''என்னய்யா தீவிர யோசனை?'' என்று சிரித்தபடி டெபுடி கமிஷனர் சண்முகநாதன் உள்ளே வந்தார்.

''டான் கலிலியோ பத்தித்தான்.''

''ஓ...டானா?''

''ஒரு விவரமும் கைவசம் இல்லாம எப்படித் தேடறதுன்னு பிரமிப்பா இருக்கு சார்.''

''இவங்களுக்கு இதான் வேலை தேவா. அப்பப்போ புடிக்கறேன்னு கிளம்புவாங்க. எல்லாம் கொஞ்ச நாள்தான். மெல்லப் புஸ்ஸுனு சுருதி இறங்கிடும். இருவது வருஷமாப் பார்க்கிறேனே...

தலைவர் புதுசா வந்திருக்கார். அ ந் த ஜோருலதான்.''

சொல்லும் டிசிபி சண்முகநாதனைப் பார்த்தார் தேவதேவன். 50 வயது நிடகாத் திரரான திறமைசாலிதான் டிசிபி. பாவம். முயன்று தோற்ற அலுப்பும் வெறுப்பும் தான் அவரை அப்படிப் பேசச் செய்கிறது.

ஆனால் தேவதேவன் விடப் போவ தில்லை. சவாலும், சாகசமும் சூழ்ந்த ஏஸ் கிரிமினல் அவரை காந்தம் மாதிரி கவர்ந்து விட்டான். ''விரைவில் வருகிறேன் டான் கலிலியோ.''

காரை ஆரோக்கியமான வேகத்தில் செலுத்திக் கொண்டிருந்தான் பிரகாஷ். சற்று முன்னர்தான் தாம்பரம் தாண்டியிருந் தான். அவன் அருகாமையிலிருந்த சிந்துஜா புத்தம் புது மலராய், கழுத்தில் தாலி மஞ்ச ளாக மின்ன, அவனையே பெருமிதமாகப் பார்த்தபடி. பின்னணியில் ஸ்டீரியோவில் சன்னமாகக் கசிந்தபடி சமந்தா ஃபாக்ஸ்... டச் மீ!

அவனுக்கு எங்கோ மிதப்பது போன்ற தொரு உணர்வு. உலகமே இனிமை பூசி சொர்க்கபுரியாகக் காட்சியளித்தது. காலை 8:00. சாலையில் போக்குவரத்து வெகுவாக மட்டுப்பட்டிருக்க, மெ ல் ல த் திரும்பி னான்.

இயற்கையின் இனிய இல்லற இரசா யனமும், மாறாத காதலும் மிக - திருமணம் முடிந்து இந்த இரண்டு நாட்களும் வேறொரு உலகம் சிருஷ்டித்து சிறகடித்து விட்டுத் தற்போது காரில் ஹனிமூன் பயணம். சிந்துஜாவிடத்தில் யாதொரு களைப்பும் காணோம். மாறாக அலாதி யானதொரு மலர்ச்சியும், நி ழ ல ா ன வெட்கப் பூச்சும்.

''என்னங்க?'' என்று அழைத்தாள்.

''சே! பேச்சுல என்ன திமிர் மரி யாதை?''

நமுட்டுச் சிரிப்புடன் சிந்துஜா, ''நீங்க யார்? கட்டிய கணவன்! பாருங்க தாலி மஞ்சள் ஈரம் கூட உலரலை. பேர் சொல் லிக் கூப்பிடலாமா? என்னங்க...'' என்றாள் மறுபடி.

''வெறுப்பேத்தாதே சிந்து.''

கண்களில் குறும்பு மின்ன, ''சரிங்க!'' என்றாள்.

''ஷட்டப்.''

''என்னங்க நாம இப்போ...''

அவன் பதில் சொல்லவில்லை.

''சரிடா பிரகாஷ்!''

சிரித்தார்கள்.

''இப்போவாவது சஸ்பென்ஸ் உடைச் சுச் சொல்லுங்க பிரகாஷ். இப்போ நாம எங்கே போறோம்?''

''கொ-டை-க்-கா-ன-ல்!'' என்றான் ஸ்டைல் உச்சரிப்பில்.

''மை காட். அவ்வளவு தூரமா கார்ல!'' என்ற சிந்துஜா தன் அழகான கருவிழி களைப் படபடத்து விட்டு, ''டிரெயின்ல புக் பண்ணிப் போயிருக்கலாமேப்பா?''

''ஏன் பிளேன்ல மதுரை வரை போயிருக்கக் கூடாதா? காரணமாத்தான் கார் கண்ணே! பக்கத்துல ஸ்வீட் ஹார்ட் டைச் சீண்டிக்கிட்டுக் கார்ல நெடுந்தூரம் போறது இனிமையான ஹனிமூன் அனு பவமா இருக்கும்.''

''உதைப்பேன்'' என்று தன் சுட்டு விர லால் அபிநயித்தாள் சிந்துஜா.

''கார்னா நினைச்ச இடத்துல நிறுத்த லாம். சாப்பிடலாம். காரைப் பூட்டிட்டுக் காலாற நடக்கலாம். பசுமையான வயல்ல மெய்மறக்கலாம். அப்புறம் 'மூடு' வந்தா...''

''வந்தா?'' என்றாள் கன்னம் செம்மை யாக.

''காரை ஒரு ஓரமா நிறுத்திடுவேன்.



☐ கேரள மாநிலம் கொச்சியைச் சேர்ந்த வின்சென்ட் டெலிஃபோன் இலாக்கா மீது வழக்குப் போட்டுள்ளார். காரணம், இவரை ''டாக்டர்'' என்று ஃபோன் புத்தகம் குறிப்பிடுவதுதான். ஆய்வு நடத்தி டாக்டர் பட்டம் பெற்ற இவர் வக்கீல் தொழில் நடத்தி வருகிறார். தவறைக் குறிப்பிட்டு ஏற்கெனவே எழுதியும், அடுத்த பதிப்பிலும் திருத்தப்படவில்லை. இவரை டாக்டர் என்று கருதிப் பலரும் நள்ளிரவில் கூட ஃபோன் செய்து சிரமப்படுத்துவதுடன் தாங்களும் ஏமாறுகிறார்கள். ஏன், தங்கள் வீட்டு மாடு அல்லது நாய்க்கு வைத்தியம் பார்க்குமாறு கூட அழைப்பு வருகிறதாம். ஒரே எரிச்சல் இவருக்கு!

- எஸ். எஸ். மணி

கறுப்புக் கண்ணாடியை மேலேத்திருவேன்..."

"அப்புறம்?"

"ஒரு அவசர முத்தச் சலுகை?"

"நத்திங் டூயிங்."

பிரகாஷ் பிரமிப்பு வசப்பட்டிருந்தான். உண்மையில் இந்த ப்ரிய தேவதை அவனுடையவள்தான் என்பதை அவ்வப்போது தொட்டு உறுதி செய்து கொள்ள வேண்டியிருந்தது.

மாமண்டூரில் நிறுத்தினான். வெட்டிய இளநீர்ச் சுவையில் கவனமில்லாமல் பரஸ்பரம் பார்வையால் பருகிக் கொண்டார்கள்.

மீண்டும் கார் இளம்பியது.

கடந்த சில நிமிடங்களாக அந்த லாரி தொந்தரவு செய்து கொண்டிருந்தது. வேகமாக விரையாமல் வழியும் விடாமல் நந்தி மாதிரி. பிரகாஷ் தொடர்ந்து ஹாரன் ஒலித்துப் பார்த்தது பலனளிக்கவில்லை. என்ன ஒரு அலட்சியம்... எருமைத்தனம்... அல்லது வேறு நோக்கம் ஏதேனுமோ...

சினத்தில் முகம் சிவக்க, "ராஸ்கல்!" என்றவன் வாகாகச் சாலையில் அகலம் வந்ததும் ஆக்ஸிலேட்டரை அபாய அளவு அழுத்தி லாரியைச் சடுதியில் தீற்றலாகக் கடந்தான்.

அவனுடைய கோபம் அவளுக்கு வியப்பளித்தது. இப்போதுதான் முதன்முறையாகப் பார்க்கிறாள். "உங்களுக்குக் கோபம் கூட வருமா பிரகாஷ்?"

"ம்கூம்! லேசில கோபம் வராதுதான். ஆனா வந்துருச்சுன்னா..." என்று மர்மமாகச் சிரித்தான்.

சாண்ட்விச் சாப்பிட்டார்கள்.

சீட்டில் நன்கு சாய்ந்து கொண்டாள் சிந்துஜா. மெல்லக் கண் செருகிற்று.

சில நிமிடங்கள் கூடக் கண்ணசரவில்லை. பிரகாஷைப் பிரிவது போலத் திரும்பவும் அந்தக் கெட்ட கனவு வந்தது. திக்கென்று விழித்துக் கொண்டவள் பிரகாஷைப் பார்த்ததும் திடுக்கிட்டாள்.

அவர்கள் அப்போது மேல்மருவத்தூரை நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

பிரகாஷ் முகம் லேசாக வியர்த்திருந்தது. அவன் விழிகள் ரியர் வ்யூ மிர்ரரில் நிலைத்திருந்தது. அவன் கை-முஷ்டி வெளுக்குமளவு-ஸ்டியரிங் வீலை இறுகப் பற்றியிருந்தது. ஏதோ தவறு நேர்ந்து விட்டது என்பது அவளுக்குப் புரிந்து விட்டது.

"என்னாச்சுப்பா?" என்றாள் படபடப்பாக.

"நம்மை ஒரு கார் பின்தொடர்ந்துகிட்டிருக்கு!"

(தொடரும்)

# சொந்தமே அந்நியமாய்...

"சாதனா... ஒனக்கே இது நல்லா இருக்கா?" கனகசபை கவலையோடு மகளைப் பார்த்தார்.

"எதுப்பா?" வெகு பவ்யமாய்க் கேட்டாள் சாதனா. அப்பாவின் முகத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ஆனாலும் தன் உறுதியை விடத் தயாராக இல்லை.

"எல்லாருக்கும் உன்னைப் பிடிச்சிப் போச்சு! நான் குறிக்க வேண்டியதுதான் பாக்கி! இந்த நேரத்திலே மாப்பிள்ளை கிட்டே தனியாப் பேசப் போறேன்னு சொல்றே...!" கனகசபை இழுத்தார்.

"அதுவும் என்ன கேட்கப் போறே... தெரியுமில்லே?" இதுவரை சும்மா இருந்த அலமேலு மகளைக் கண்களாலேயே எரித்தாள்.

"அதுதான்... வயித்தைக் கலக்குது... சாதனாக் கண்ணா!" கனகசபை கெஞ்சினார்.

"சாரிப்பா! என் முடிவை மாத்திக்கிற மாதிரி இல்லே!" பட்டென்று அடுக்களைக்குள் போய் விட்டாள்.

"ரொம்பச் செல்லம் கொடுத்து வளர்த்தீங்களே... படுங்க!" அலமேலுவும் விலகிக் கொண்டாள். தெய்வங்களைத் துணைக்குக் கூப்பிட்டபடி, ஹாலுக்கு வந்தார் கனகசபை.

கம்பீரமாய் உட்கார்ந்திருந்த தினேஷ், அவன் பக்கத்தில் இருந்த அமைதியே உருவான அவன் தந்தை, மங்கலம் ததும்பும் அவனுடைய தாயார் எல்லோரையும் தயக்கத்துடன் பார்த்தார். சாதனாவால் இந்த நல்ல வரன் தவறிப் போய் விடுமோ என்கிற ஏக்கம் வியர்க்க வைத்தது.

"என்னங்க... எதையோ சொல்லத் தயங்கிறாப் போல இருக்கு!" முறுவலோடு தினேஷ் முந்திக் கொண்டான்.

"வந்து... வந்து... சாதனா... ஒங்க கிட்டே தனியாப் பேசணுமாம்!" சொல்லி முடிப்பதற்குள் சொல்ல முடியாத தவிப்பு அவரை ஆக்ரமித்தது.

"வெரிகுட்! நான் ரெடி! இப்பவே... பேசலாமா? எங்கே?" அடுக்கிக் கொண்டே போன தினேஷை, அவஸ்தையுடன் பார்த்தார் கனகசபை.

'அதிலேதான் தம்பி ஆபத்திருக்கு!' என்று சொல்ல நினைத்தார். அடக்கிக் கொண்டார்.

"பேஷா... பேசட்டும்! நாளைக்கு ஒண்ணா வாழப் போறவங்கதானே?" தினேஷின் தந்தை வரவேற்றார். சந்தோஷமாய்த் தலையாட்டினாள் அவனுடைய அம்மா!

"ஒரு நிமிஷம்!" உள்ளே ஓடினார். சில

**தங்க. சிவராசன்**





நொடிகள் கழித்து, தினேஷை சாதனாவின் அறைக்கு அழைத்துச் சென்றார். வெளியே தவிப்போடு நின்ற அலமேலு பக்கத்தில் நின்று கொண்டார். இருவர் உதடுகளும் வேகமாய்ப் பிரார்த்தித்தன.

அறையின் உள்ளே -

ஓரத்தில் டிரஸ்ஸிங் டேபிளை ஒட்டி நின்று கொண்டிருந்தாள் சாதனா. இதுவரை இருந்த ஆவேசமும், ஆத்திரமும் அவசரமாய் விலகி ஓடின. இதயம் தேவையில்லாமல் படபடத்தது. முகத்தில் வியர்வைத் துளிகள் விரைந்து வந்தன.

''ஹலோ!'' தினேஷ் வெகு இயல்பாய் உள்ளே வ ந் தா ன். ஓரக்கண்ணால் அவனைப் பார்த்தவள், 'அந்தக் கேள்வி கேட்க வேண்டாமே!' என்று தன்னையே திட்டினாள்.

''ஹலோ! என்ன.. ஏதோ... தனியாப் பேசணும்னு சொல்லிட்டு... இப்படி நிக்க நீங்க... சாரி! எனக்குக் கால் வலிக்குது.. நான்... உட்கார்றேன்!'' சற்றுத் தள்ளியிருந்த சோபாவில் நிம்மதியாக உட்கார்ந்து கொண்டான்.

''ஓ...கே! நீங்க... பேசல்லேன்னா.. பரவாயில்லே! முதல்லே உட்காருங்க!'' கலகலப்பான அவனது பேச்சு! சொற்களில் எட்டிப் பார்த்த மரியாதை சாதனாவைத் திகைக்க வைத்தது. 'இவரா... அவ்வளவு கேவலமான நிபந்தனை போட்டிருப்பார்?' யார் கண்டது? மரியாதைக்கும் பேராசைக்



கும் விரோதம் இருக்கத் தேவையில்லையே!

''என்ன... உட்காரவும் போறதில்லையா?'' தினேஷ் கேட்டதும், ''வந்து... இவ்வளவு நாகரிகம் உள்ள நீங்களா?'' சாதனா துணிந்து, பாதிக் கிணற்றைத் தாண்டினாள்.

''நாகரிகம் உள்ள நீங்களா...'' என்று அவள் சொன்னதைத் திருப்பிச் சொன்ன தினேஷ், ''ப்ளீஸ்! கம்ப்ளீட்...'' என்றான். அவனது கேள்வியில் ஆர்வம் தெரிந்தது. குத்திக் கொண்ட புருவங்கள் 'இவள் என்ன குற்றப் பத்திரிகை படிக்கப் போகிறாள்?' என்று கூர்ந்து நோக்கின.

''யெஸ்! இவ்வளவு இங்கிதம் தெரிஞ்ச நீங்க... அப்படி ஒரு கண்டிஷன் போடலாமா?'' சாதனா மீண்டும் அதே நிலையில் நின்றாள்.

''என்ன கண்டிஷன்? தெளிவாச் சொல்லுங்க... ப்ளீஸ்!'' குரலில் எரிச்சல் கொப்புளித்தது.

''வந்து... அறுபதாயிரம் கேஷா... வைச்சாத்தான் தாலி கட்டுவேன்னு...'' சாதனா முடிக்கவில்லை.

''ஓ.. அதைச் சொல்றீங்களா?'' என்றவன் கொஞ்சமும் கோபப்படாமல், ''அதை மட்டுந்தான் சொன்னாரா... உங்கப்பா?'' என்று கேட்டான்.

''ஏன்... இன்னொரு கண்டிஷன் இருக்கா...?''

''இருக்கே!''

''அது... என்ன... ஸ்கூட்டரா...? பங்களாவா?'' ஏளனத்தைத் தன் சொற்களில் ஏராளமாய்த் தோய்த்தாள் சாதனா. ஆனால் தினேஷ் அதிரவில்லை.

''இல்லை! இது வேறே! அதை உங்கப்பா மட்டுமில்லே... எந்தப் பெண் வீட்டாரும் ஏத்துக்க மாட்டாங்க!'' தினேஷ் முறுவலித்தான்.

''என்ன சொல்றீங்க?''

''யெஸ்! நான் போட்ட முதல் நிபந்தனையை உங்கப்பா மறைச்சிட்டாரு! ரெண்டாவதைச் சொல்லியிருக்காரு!''

''என்ன சொல்றீங்க?'' 'அப்பாவின் மீது தவறான குற்றச்சாட்டை வாசிக்கிறாரோ' என்ற தவிப்புடன் கேட்டாள் சாதனா.

''உண்மையைத்தான் சொல்றேன்! என்னுடைய முதல் நிபந்தனை கடைசிக் காலம் வரைக்கும் என் அப்பா, அம்மா என்னோட இருக்கணும்! இருப்பாங்க! தனிக் குடித்தனத்துக்கு நான் ஒத்துக்க மாட்டேன்னு சொன்னேன்... அதுக்கு உங்கப்பா என்ன சொன்னாரு... தெரியுமா? 'அதெப்படி... உறுதி சொல்ல முடியும்? அவ... சின்னஞ்சிறிசு. அவளுக்கு ஆயிரம் ஆசைகள் இருக்

கும்! உங்க பெரியவங்களுக்கு ஒத்துப் போவாமப் போகும். அப்ப... தனிக்குடித் தனம் போகலாமில்லியா...?' என்று சொன்னார். அப்பத்தான்... நான் சொன்னேன்.... என் பெற்றோருக்காக அறுபதாயிரம் கொடுக்கணும்னு.... தப்பா?''

''உங்க... அப்பா, அம்மாவுக்காக என்னைப் பெத்தவங்களைப் பணம் கொடுக்கச் சொல்றது... தப்புத்தானே?''

''புரியுது! நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு!'' தினேஷ் தொடர்ந்தான்:

''எங்கப்பா... கிராமத்திலே விவசாயம் பண்றவர். அவரோட நான்கு பிள்ளைங்கள்லே... நான் கடைக்குட்டி... தெரியுமா?''

''தெரியுமே! மூத்தவர் ரிசர்வ் பேங்க்லே இருக்கார். ரெண்டாவது பிள்ளை காலேஜ் புரொபசர். மூணாவது பிள்ளை ஆடிட்டரா இருக்கார். நீங்க... என்ஜினியர்!''

''யெஸ்! கிராமத்து விவசாயியா இருந்தாலும் எங்கள் எல்லோரையும் நல்லாப் படிக்க வைச்சார். அதுக்காக... அவர் பட்ட கடன் நாற்பதினாயிரம்! முதல் அண்ணன் வேலைக்குப் போனதும் தன் பஞ்சமும் குறையும், கடன் அடையும்னு பாத்தாரு. அண்ணன் வேலைக்குப் போன மூணாவது மாசமே, பெரிய இடத்துச் சம்பந்தம் வந்தது. ஒரு பைசா வரதட்சணை வாங்காம... கல்யாணம் பண்ணார். கொஞ்ச நாள்லே... அண்ணி அவரைத் தனிக் குடித்தனம் பண்ண வெச்சுட்டாங்க. இன்னைக்கு மூணு கிரவுண்ட்லே அட்டகாசமான பங்களா... காரு... எல்லா வசதியும்! ஆனா எங்களுக்கு... அங்கே இடம் இல்லே. அதே வழியிலே ரெண்டாவது, மூணாவது அண்ணாக்களும் கம்பி நீட்டிட்டாங்க. எல்லாரும் நல்லா இருக்காங்க.

''ஆனா... அப்பா வாங்கின கடன் மட்டும் அவரைப் பிரியலே. இதோ.... நான் வேலைக்குப் போய் ரெண்டு மாசம் கூட ஆகலே! எனக்கு நிச்சயம் பண்றாரு. யோசிச்சிப் பாருங்க! பெண்களையே வருமானத்துக்காகக் கல்யாணம் பண்ணிக் கொடுக்காத அப்பா போல... எங்கப்பா நடக்கல்லே! நெனைச்சிருந்தா... முதல் அண்ணா கல்யாணத்தைத் தள்ளிப் போட்டுக் கடனை அடைச்சிருக்கலாம்! ஆனா... பிள்ளைக்கு நல்ல இடம், நல்ல வாழ்வு கிடைக்கறதைத் தடுக்கிற சுயநலம் அவர்கிட்டே இல்லே. அதனோட விளைவு அவர் கடனாளியா இருக்காரு. எல்லாத்தையும் விட கொடுமை, அவரோட சொந்த மகன்களே அவருக்கு அந்நியமா ஆயிட்டாங்க! அந்தத் தப்பை நான் செய்ய விரும்பல்லே. இப்பச் சொல்லுங்க! எங்கப்பா, அம்மா... நம்மோட இருக்கட்டும்; எனக்கு ஒரு பைசா வேணாம்! கட்டின புடைவையோட நீங்க வரலாம், கட்டிக்க நான் தயார்!''

தினேஷை மரியாதையுடன் பார்த்தாள் சாதனா.

''என்னை மன்னிச்சிடுங்க!'' என்றவள், ''நாமாவது அவங்களுக்கு நல்ல மகனா, மருமகளா நடப்போம்!'' என்று வெட்கத்துடன் சொன்னாள்.

## தபால்பெட்டி பிறந்த கதை!

❑ ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஆப்பிரிக்கா அருகில் சில போர்ச்சுகீசியக் கப்பல்கள் புயலில் சிக்குண்டு மூழ்கி விட்டன. அதில் தப்பிப் பிழைத்த ஒருவர் தங்களுக்கு நேர்ந்த கதி பற்றி ஒரு கடிதம் எழுதி, சுலபமாக அடையாளம் தெரிய தன் ஷூவை (காலணி) கடற்கரை அருகே ஒரு மரத்தில் தொங்க விட்டு அதில் கடிதத்தைப் போட்டு விட்டுச் சென்றார். பின்னர் வந்த மாலுமிகள் அதன் மூலம் தகவல் அறிந்தனர். நாளாவட்டத்தில் மாலுமிகள் தவிர, அவ்வூர் மக்களும் அதன் மூலமே தங்கள் கடிதங்களைப் பரிமாறிக் கொண்டனர். உலகத்தின் முதல் தபால் பெட்டி பிறந்த கதை இதுதான்.

அம்மரம் இன்றும் அப்படியே உள்ளது. அதனடியில் உள்ள நவீன கான்கிரீட் அஞ்சல் பெட்டி பழைய சம்பவத்தின் நினைவுச் சின்னமாக 'ஷூ'வின் வடிவத்திலேயே அமைக்கப்பட்டுள்ளது.

ஆதாரம் : ''நவீந்து''
தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

### அமெரிக்காவில்.......

❑ புது மாடல் செருப்பு ஒன்றைக் கண்டுபிடித்துள்ளனர். குதிகாலைத் தட்டினால் அதில் ஒரு சுவிட்ச் 'ஆன்' ஆகிச் செருப்பு நுனியில் இணைந்துள்ள சக்தி வாய்ந்த டார்ச் லைட்டை இயக்குகிறது. இரவு நேரத்தில் அது கொடுக்கும் பிரகாசமான வெளிச்சத்தில் தட்டுத் தடுமாறாமல் நடக்கலாம்.

நன்றி : நியூஸ் வீக்

## வடசென்னையில்

# சில வசந்தங்கள்

**த**ண்டையார்ப் பேட்டை பஸ் பணிமனைக்கு எதிரே, சேனியம்மன் கோயில் வீதியில் நுழைந்து, திருவள்ளுவர் நகர் செல்ல வழி கேட்டதும், ஒரு குறுகலான தெருவைக் காண்பித்தார்கள். குடிசைப் பகுதிக்குத்தான் கொண்டு செல்லுமோ என்று நினைத்தோம். ஆகா! திருவள்ளுவர் நகர் அடுக்குமாடிக் கட்டடக் குடியிருப்பு, தென் சென்னைக் குடியிருப்பு மாதிரி பிரமிக்க வைத்தது. காம்பவுண்டுக்குள் நிறைய இடம். குழந்தைகள் எல்லோரும் உற்சாகமாக விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

குடியிருப்புகள் சரியான பராமரிப்புக் காரணமாகப் பளிச்சென்று இருந்தன. கீழ்த் தளத்தில், பச்சைப் பசேல் என்று காய்கறி, பூ, செடி-கொடிகள் பார்க்க ரம்மியமாக இருந்தன. தினமும் காலை 6 மணிக்கு, தேசியக் கொடி ஏற்றுகிறார்கள்!

''364 குடியிருப்புகள் இங்கே இருக்கின்றன. வருடா வருடம், எங்கள் குடியிருப்போர் சங்க நிர்வாகத் தேர்தலை அமைதியாக நடத்தி வருகிறோம். அரசியல் எங்களிடையே கிடையாது. அதே போல, தேர்தல் சமயத்திலும் சுவரொட்டிகள், பிரசாரம் என்று காலனிக்குள் எந்தவித வம்பு வழக்கும் அனுமதிப்பதில்லை. எலெக்ட்ரீஷியன், அக்கவுன்டென்ட், வாட்ச்மேன் எல்லாம் மாதாந்திரச் சம்பள அடிப்படையில் காலனிக்கென்றே வைத்திருக்கிறோம். குடிதண்ணீர் வசதிக்குப் பெரிய வாட்டர் டாங்க் இருக்கிறது...'' என்றார் செயலாளர் பாண்டியன்.



☛ தணிகைவேலு நடத்தும் ஜிம்னாஷியம்...

இவர்களுக்கு இருப்பது ஒரு நியாயமான குறை : ''வருகிற வழி, வழிப்பறிக்கு வசதியாக அமைந்திருக்கிறது. சோடியம் வேப்பர் விளக்கு அமைத்தால் நல்லது.''



☛ அரு. சங்கர்

## 'மிஸ்டர் இந்தியா' அண்ணாமலை

**என் 56, ஜி. ஏ. ரோடு மாடியில் ஒரு ஜிம்னாஷியம். தணிகைவேலு** நடத்தி வருகிறார்.

உற்சாகத்தோடு பயிற்சி செய்யும் இளைஞர் கூட்டத்தைப் பார்த்த போது, சந்தோஷமாக இருந்தது. இயந்திரங்கள் எல்லாமே பம்பாயிலிருந்து தருவிக்கப் பட்டவை. கைகளுக்கும், தொடை-கால் பகுதிகளுக்கும் வலு கூட, வகை வகையான பயிற்சிகள். உடல் எடையைக் கூட்ட மட்டு மல்ல, ஊளைச் சதையைக் குறைக்கவும் சில இயந்திரங்கள்.

''பெண்களும் வருகிறார்கள் பயிற் சிக்கு. ஆனால் அப்போது ஆண்களை அனு மதிப்பதில்லை. பெண் பயிற்சியாளரே அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறார்!'' என்றார் அண்ணாமலை. இவர் சமீபத்தில் நடந்த மிஸ்டர் இந்தியா போட்டியில், இரண்டாவது ஆண் அழகராகப் பரிசு பெற் றிருக்கிறார்!

## சஞ்சீவிராயன் யார்?

சஞ்சீவிராயன் கோயில் தெருவில், ஒரு துக்கினியூண்டு கோயில். கூட்டமோ, நெரிசலான கூட்டம். ஒரு நூற்றாண்டைத் தாண்டிவிட்ட இந்தச் சின்னக் கோயிலில் சஞ்சீவிராயன் வணங்கப்படுகிறார். சஞ்சீவி ராயன் யார்? சாட்சாத் ஆஞ்சநேயர்தான்.

## 25 வருடத்தில் 2500 திருமணங்கள்!

தண்டையார்ப்பேட்டை பகுதியில், ''அரு. சங்கர் யாரு?'' என்று கேட்டால், சின்னக் குழந்தை கூடச் சொல்லி விடும் அளவுக்குப் பிரபலமானவர் அரு. சங்கர லிங்கம். (ஆனால் அரு. சங்கர் என்றே சுருக்கமாகப் பலராலும் குறிப்பிடப்படு கிறார்.) ஒரு காலத்தில், பெரியாரின் பேச் சுக்களைக் கேட்டு நூறு சத நாத்திக



சிறுமி : அம்மா அந்த ஜவுளிக் கடை யிலே நாம ஒண்ணும் பார்க்க முடியாது.

தாய் : ஏண்டி...

சிறுமி : அந்தக் கடை வாசல்லே 'நோ பார்க்கிங்'ன்னு போர்டு போட்டிருக்காங்க!

- நித்யா சங்கர்

வாதியாய் இருந்த அரு. சங்கர், அண்ணா வின் கவர்ச்சியான பேச்சில் மனத்தைப் பறிகொடுத்து, காமராஜரையே ஏகம் அள வுக்கு இருந்த காலம் ஒன்று இருந்தது. இப்போது அரு. சங்கர் மாறி விட்டார். ஆனால் இப்போதும் கூட, அதாவது இரு தய பைபாஸ் அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட பிறகும் கூட, ஒரே நாளில் முகூர்த்த நேரத்தில் குறைந்தபட்சம் மூன்று திருமணங்களையாவது நடத்தி முடிக்கா மல் இவர் இருப்பதில்லை! இதுவரை, இந்த 25 வருடங்களில் 2500 திருமணங் களுக்குத் தலைமை ஏற்று, மணமக்களை உறுதிமொழி சொல்லச் செய்து, தாலிச்சரடு எடுத்துக் கொடுத்து, அக்னி வலம் வரச் செய்து, நீறுபூசி, ஆசிகூறி உரையும் ஆற்றி யிருக்கிறார்! 'சிவாயநம சிந்தனை' அரங் கில் பல பேச்சாளர்களை அழைத்து வந்து சொற்பொழிவாற்ற வைக்கிறார். சுயேச்சை வேட்பாளராக ஒருமுறை தேர்தலில் நின்ற வர், பிறகு காங்கிரஸ் சார்பில் நின்ற போது கையில் முறிவு ஏற்பட்டு, பிரசாரத்துக்கே போக முடியாத நிலை உண்டாயிற்று. இப் போதும் காங்கிரஸ்காரர்தான். ஆனால் மூப்பனார் கோஷ்டியா, வாழப்பாடி கோஷ் டியா என்று கண்டுபிடிப்பது சிரமமான காரியம்!

- சாருகேசி

◆ திருவள்ளுவர் நகர் குடியிருப்போர் சங்க உறுப்பினர்கள்...



# சிவகாமியின் சபதம்

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்
## சகோதரர்கள்

புலிகேசியும் புத்த பிக்ஷுவும் ஒரே மனிதர்தான் என்று சிவகாமி எண்ணிக் கொண்டதில் வியப்பு ஒன்றுமில்லை. சற்று முன்னால், புலிகேசிச் சக்கரவர்த்தியே மேற்படி உருவ ஒற்றுமை காரணமாகத் திகைக்கும்படி நேர்ந்தது.

வாதாபிச் சக்கரவர்த்தி தம்முடைய கூடாரத்தில் தன்னந் தனியாக உட்கார்ந்திருந்தார். அவருடைய மனத்தில் பெருஞ் சோர்வு குடி கொண்டிருந்தது. வாதாபியிலிருந்து அவர் புறப்பட்டபோது என்னென்ன உத்தேசங்களுடன் கிளம்பினாரோ அவை ஒன்றும் நிறைவேறவில்லை. எல்லாம் மகேந்திர ஜால பல்லவனுடைய தந்திரங்களினால் உருப்படாமற்போயின.

மகேந்திர பல்லவனுடைய தந்திரங்களுக்கு மாற்றுத் தந்திரங்கள் செய்து அவனைத் தோற்கடிக்கக்கூடிய சாமர்த்தியம் வாய்ந்தவரான நாகநந்தி பிக்ஷுவைப் பற்றித் தகவலே கிடைக்கவில்லை.

இதனாலெல்லாம் புலிகேசி பெரிதும் உற்சாகம் குன்றியிருந்தார். அவருக்கிருந்த ஒரே ஓர் ஆறுதல் தளபதி சசாங்கன் மூலம் மகேந்திர பல்லவனுக்கு ஒரு பாடம் கற்பிக்க ஏற்பாடு செய்து விட்டு வந்ததுதான். ஆ! பல்லவ நரி தன்னுடைய பொந்தை விட்டு வெளியே வந்து பார்க்கும்போது, வாதாபிப் புலிகேசியை வஞ்சித்து ஏமாற்றுவது எவ்வளவு பிசகான காரியம் என்பதைக் கொஞ்சம் தெரிந்து கொள்வானல்லவா?

தளபதி சசாங்கன் தம்முடன் வந்து சேர்வதற்காகவே சக்கரவர்த்தி வட பெண்ணையின் வடகரையில் காத்துக் கொண்டிருந்தார். கட்டளையை நிறைவேற்றிவிட்டு வந்துசேரச் சசாங்கனுக்கு ஏன் இத்தனை நாள் பிடிக்கிறது என்று அவருக்குக் கோபம் வந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் தெற்கேயிருந்து படை வருகிறது என்று கேட்டதும் சசாங்கன்தான் வருகிறான் என்று எண்ணி, அவன் கொண்டு வரும் செய்தியைக் கேட்பதற்காக மிக்க ஆவலுடன் இருந்தார். கூடாரத்துக்கு வெளியே குதிரை ஒன்று வந்து நின்றதும், சசாங்கன் இவ்வளவு தாமதமாய் வருவதற்காக அவன்மேல் எரிந்து விழுவதற்கு ஆயத்தமானார்.

ஆனால், உள்ளே பிரவேசித்து வந்தது சசாங்கன் அல்ல. கிரீடமும், வாகுவலயமும், சக்கரவர்த்திக்குரிய மற்ற ஆபரணங்களும் தரித்த நெடிதுயர்ந்த கம்பீர உருவம் ஒன்று வந்தது.

அதைப் பார்த்ததும் புலிகேசிக்கு ஏற்பட்ட திகைப்புக்கும் குழப்பத்துக்கும் எல்லையேயில்லை. 'இது என்ன? எனக்குச் சித்தப் பிரமை பிடித்துவிட்டதா? அல்லது மாயக் கனவு காண்கிறேனா? பின், ஆசனத்தில் இதோ சாய்ந்து உட்கார்ந்திருக்கும் நானே கூடாரத்துக்கு வெளியிலிருந்து எப்படி உள்ளே வர முடியும்?' என்று திகைத்தார்.

புலிகேசியின் குழப்பத்தைப் பார்த்து விட்டு வெளியிலிருந்து வந்த உருவம் புன்னகை புரிந்து, ''தம்பி! ஏன் இப்படிப் பயப்படுகிறாய்? நான் என்ன பேயா, பிசாசா, பூதமா? உனக்கு என்னைத் தெரியவில்லையா?'' என்று சொல்லிக் கொண்டே தலைக் கிரீடத்தை எடுத்ததும், பிக்ஷுவின் மொட்டைத் தலை காணப்பட்டது. உடனே புலிகேசி குதூகலத்துடன் துள்ளி எழுந்து, ''அண்ணா நீயா?'' என்று கட்டிக் கொள்ளப் போனவர், மறுபடியும் திகைத்து

நின்று, ''ஆஹா! இது என்ன வேஷம்? உன்னுடைய வாக்குறுதி....?'' என்று வினவினார். அப்போது புலிகேசியின் கண்களின் ஓரங்களில் பொறாமையுடன் கூடிய குரோத ரேகை தென்பட்டது.

''தம்பி! அதற்குள்ளே அவசரமா? ஒரு சந்தர்ப்பத்தில் இந்த வேஷம் உன்னுடைய உயிரைக் காப்பாற்றுவதற்குப் பயன் பட்டதல்லவா? இப்போது என்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்கு இது பயன்பட்டது. என் வாக்குறுதிக்கு ஒரு பங்கமும் நேரவில்லை. உன்னுடைய ராஜ்யத்தில் நான் இந்த வேஷம் போட்டுக் கொள்வதில்லையென்றுதானே வாக்குறுதி கொடுத்தேன்? இன்னும் உன்னுடைய சாம்ராஜ்யத்துக்குள் நாம் வந்துவிடவில்லையே?'' என்று நாகநந்தி சொன்னதும் புலிகேசி கொதிப்புடன் கூறினார் :

''ஆம்; ஆனால் இந்தப் பிரதேசம் இன்று நம்முடைய சாம்ராஜ்யத்துக்குள் வராதிருப்பது ஏன்? பல்லவ நாட்டில் இன்று வராகக் கொடி பறக்காதது ஏன்? அற்பத்திலும் அற்பமான மகேந்திர பல்லவனுடைய சைனியத்துக்கு முன்னால் வாதாபியின் மகா சைனியம் தோல்வியடைந்து திரும்பிப் போவது ஏன்? எல்லாம் உன்னால் வந்ததுதான்!''

''தம்பி! தோல்வி என்கிற வார்த்தையையே சொல்லாதே! யார் தோல்வியடைந்தது? வாதாபி சைனியம் தோல்வியடையவில்லை, நீயும் தோல்வியடையவில்லை. அந்தத் தோல்வி என்னால் நேரவும் இல்லை. எல்லாம் சாவகாசமாகப் பேசுவோம். முதலில் உடனே காவி வஸ்திரம் இரண்டு தருவித்துக் கொடு. நான் இந்த வேஷத்தில் இருந்தால் வீண் குழப்பத்துக்கு இடமாகும். ஏற்கெனவே, நான் வந்து கொண்டிருந்தபோது வெளியில் நிற்கும் வீரர்கள் என்னை வெறித்து வெறித்துப் பார்த்தார்கள்!''

''ஆமாம்; அவர்கள் வெறித்துப் பார்ப்பதற்குக் காரணம் இருக்கிறதல்லவா? கூடாரத்திற்குள் இருந்த சக்கரவர்த்தி வெளியில் எப்போது, எப்படிப் போனார் என்று அவர்களுக்குத் திகைப்பாயிருந்திராதா? எனக்கே கொஞ்ச நேரம் குழப்பமாய்ப் போய்விட்டதே!'' என்று புலிகேசி கூறிவிட்டு கூடாரத்தின் வாசலில் நின்ற காவலனிடம், ''உடனே ஒற்றர் விடுதிக்குச் சென்று காவி வஸ்திரம் இரண்டு கொண்டுவா!'' என்று கட்டளையிட்டார்.

**கா**வி வஸ்திரம் வந்தவுடனே நாகநந்தி உடையை மாற்றிக் கொண்டார். சகோதரர்கள் இருவரும் ஒரே ஆசனத்தில் அருகருகே உட்கார்ந்தார்கள்.

''தம்பி! இப்போது சொல்லு! நீ வாதாபியை விட்டுப் புறப்பட்டதிலிருந்து நடந்ததையெல்லாம் விவரமாகச் சொல்லு!'' என்று நாகநந்தி கேட்க, அவ்விதமே புலிகேசி கூறிவந்தார்.

எல்லாவற்றையும் கவனமாகக் கேட்ட பிறகு, பிக்ஷு கூறினார் : ''ஆகா! மகேந்திர பல்லவன் நான் நினைத்ததைக் காட்டிலும் கெட்டிக்காரன். நெடுகிலும் நம்மை ஏமாற்றி வந்திருக்கிறான்!''

''அண்ணா! இராஜ்ய தந்திரத்தில் உன்னை வெல்லக் கூடியவன் இந்த உலகில் எவனுமே இல்லையென்று நினைத்திருந்தேன்.''

''ஆரம்பத்தில் நான் ஒரே ஒரு தவறு செய்தேன். அதன் பலன் நெடுகிலும் விபரீதமாகவே போய்விட்டது!''

''அடிகளே! அது என்ன தவறு?''

''பரஞ்சோதி என்னும் பிள்ளையின் முகத்தைப் பார்த்து என் மனம் சிறிது இளகிற்று.''

''அந்தத் திருட்டுப் பயலை நம்பி ஓலை கொடுத்து அனுப்பினாய்!''

''அதற்குக் காரணமானவன் நீதான், தம்பி!''

''நானா? அது எப்படி?''

''பாண்டிய நாட்டுக்குப் போய் அங்கே வேண்டிய ஏற்பாடுகள் செய்துவிட்டுக் காஞ்சிக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தேன். வழியில் ஏரிக் கரையில் ஒரு பிள்ளை சோர்ந்து படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். உன்னை நான் முதன்முதலில் அதே நிலையில் பார்த்தது ஞாபகம் வந்தது. அதனால் என் மனம் இளகி அந்தப் பிள்ளையின் பேரிலும் விசுவாசம் உண்டாயிற்று. அவனுடைய முகக் களையிலிருந்து பெரிய பதவிக்கு வரப்போகிறவன் என்று தெரிந்து கொண்டேன். ஆகையால், அவனை நம்மோடு சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற சபலமும் உண்டாயிற்று. அவனிடம் உனக்கு ஓலை கொடுத்து அனுப்பினேன். அந்த ஓலை உன்னிடம் சேர்ந்து நீ நேரே வந்திருந்தாயானால், காஞ்சிக் கோட்டையை மூன்றே நாளில் கைப்பற்றியிருக்கலாம். மகேந்திர பல்லவன் உன்னுடைய காலடியில் விழுந்து கிடப்பான்.''

''ஆனால், உன்னுடைய ஓலைக்கு மாறாக மகேந்திர பல்லவன் எழுதி வைத்த

அமரர் கல்கி

ஓலை என்னிடம் கிடைத்தது. அதன் பயனாக வட பெண்ணைக் கரையில் எட்டு மாதம் வீணாக்க நேர்ந்தது. மகேந்திர பல்லவன் ஒரு சிறு குதிரைப் படையை வைத்துக் கொண்டு, யுத்தம் செய்யாமல் வெறும் பாய்ச்சல் காட்டியே ஏமாற்றிக் கொண்டிருந்தான். அதற்குப் பிறகு நான் காஞ்சிக்கு வந்து கோட்டையை முற்றுகை யிட்டும் பயன்படவில்லை. அண்ணா! நான் வாதாபிச் சிம்மாசனத்தில் ஏறிய பிறகு முதன் முதலாக அடைந்த தோல்வி இது தான்.''

''அப்பனே! அந்த வார்த்தையை மட்டும் சொல்லாதே! தோல்வி எது? யார் 'தோல்வி' அடைந்தது? இராஜரீக சாஸ்திரத்தில் முதலாவது பாடம் என்னவென்பதை இன்னமும் நீ தெரிந்து கொள்ள வில்லையா? தோல்வியடைந்து விட்டதாக ஒரு நாளும் ஒப்புக்கொள்ளக் கூடாதென்பதுதான் அந்தப் பாடம். நீயே தோல்வியடைந்ததாகச் சொல்லிக் கொண்டால் ஊரார் அப்படிச் சொல்வார்கள்; உன் விரோதிகளும் அவ்விதமே சொல்வார்கள்; தேசமெங்கும் 'புலிகேசிச் சக்கரவர்த்தி தோல்வியடைந்தார்!' என்று செய்தி பரவும். ஹர்ஷவர்த்தனன் காதிலும் அது எட்டும். மகேந்திர பல்லவன் பொய்யாக எழுதியபடி ஒருவேளை உண்மையில் நடந்



தாலும் நடக்கலாம். நர்மதையைக் கடந்து ஹர்ஷனுடைய சைனியம் உன் இராஜ்யத்துக்குள் பிரவேசிக்கலாம். தோல்வி என்ற வார்த்தையை இனிமேல் சொல்லாதே, தம்பி!''

''நான் சொல்லாமலிருந்து விட்டால், தோல்வி வெற்றியாகி விடுமா, அண்ணா?''

''மறுபடியும் தோல்வியைக் கட்டிக் கொண்டு ஏன் அழுகிறாய்? என்ன தோல்வியை நீ அடைந்தாய்? யோசித்துப் பார்! கடல் போன்ற சைனியத்துடன் திக்விஜயம் செய்யத் தென்னாட்டை நோக்கிப் புறப்பட்டாய், வைஜயந்தியை அழித்தாய். வட பெண்ணைக் கரையில் பல்லவ சைனியத்தை நிர்மூலம் செய்தாய், காஞ்சிக் கோட்டையை முற்றுகையிட்டாய், தெற்கே கொள்ளிடக் கரை வரையில் சென்றாய். பல்லவன் சிறைப்படுத்தியிருந்த துர்விநீதனை விடுதலை செய்தாய். காவேரிக் கரையில் தமிழகத்தின் மூவேந்தர்கள் - சேர, சோழ, பாண்டியர்கள் - வந்து உன் அடி பணிந்து காணிக்கை செலுத்தினார்கள்.''

''அண்ணா! சோழன் வரவில்லையே?''

''சோழன் வராவிட்டால் களப்பாளன்



வந்தான். இதையெல்லாம் யார் விசாரிக்கப் போகிறார்கள், தம்பி? நீ திரும்பிக் காஞ்சிக் கோட்டைக்கு வந்தபோது, மகேந்திர பல்லவனும் உன்னைச் சரணாகதி அடைந்தான். மகாபலியின் தலையில் மகாவிஷ்ணு பாதத்தை வைத்ததுபோல், நீயும் மகேந்திர பல்லவனுடைய சிரசில் உன் பாதத்தை வைத்து, 'பிழைத்துப் போ' என்று உயிர்ப் பிச்சை கொடுத்தாய். அவன் கொடுத்த காணிக்கைகளைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டாய்....''

''காணிக்கை ஒன்றும் நான் கொண்டு வரவில்லையே, அண்ணா!''

''நீ கொண்டு வராவிட்டால், நான் கொண்டு வந்திருக்கிறேன்.''

''என்ன அது?''

''இன்று இரவு காட்டுகிறேன். மேற்படி விவரம் எல்லாம் உத்தர பாரத தேசத்திலே பரவும்போது, நீ திக்கு விஜயம் செய்து வெற்றி முழக்கத்துடன் திரும்பினாய் என்று சொல்வார்களா? 'தோல்வி' யுற்று ஓடி வந்தாய் என்பார்களா?''

''அண்ணா! உன் சாமர்த்தியமே சாமர்த்தியம்! தோல்வியைக் கூட நீ வெற்றியாக மாற்றக் கூடியவன். உன் பேச்சைக் கேட்ட பிறகு எனக்கே நான் அடைந்தது வெற்றி என்றே தோன்றுகிறது. ஆனால், இந்த வெற்றிச் செய்தி வடநாட்டிலே எப்படிப் பரவும்?''

''ஆ! புத்த பிக்ஷுக்களின் சங்கங்களும் சமணர்களின் மடங்களும் பின் எதற்காக இருக்கின்றன? நாகார்ஜுன பர்வதத்துக்கு உடனே ஆள் அனுப்பவேண்டும்.''

''அண்ணா! நீயே போவது நல்லது; உனக்கு வேங்கியிலும் வேலை இருக்கிறது.''

''என்ன வேலை?''

''விஷ்ணுவர்த்தனன் காயம்பட்டுக் கிடக்கிறான். சென்ற வருஷம் அவன் வெற்றி கொண்ட வேங்கி இராஜ்யத்தில் இப்போது எங்கே பார்த்தாலும் கலகமாம்.''

''அதற்கு நான் போய் என்ன செய்யட்டும்?''

''நீ போய்த்தான் அவனுக்கு யோசனை சொல்லி உதவ வேண்டும். உன்னால் முடியாத காரியம் ஒன்றுமில்லை அண்ணா! தோல்வியையும் நீ வெற்றியாக்கி விடுவாய்.''

''என்னால் இப்போது வேங்கிக்குப் போகமுடியாது.''

''ஏன்?''

''காரணம் இருக்கிறது.''

''அதைச் சொல்லேன்.''

''இராத்திரி சொல்கிறேன், தம்பி! சூரியன் அஸ்தமித்து நாற்புறமும் இருள் சூழ்ந்துவிட்டது. பூரண சந்திரன் உதயமாகப் போகிறது. இந்தக் கூடாரத்திற்குள்ளேயே அடைந்து கிடப்பானேன்? வா, வெளியே போகலாம்!''

''ஆமாம், ஆமாம்! பிரகிருதியின் சௌந்தரியங்கள் அநியாயமாய் வீணாய்ப் போகின்றன!'' என்று பரிகாசக் குரலில் சொல்லிக் கொண்டு புலிகேசிச் சக்கரவர்த்தி எழுந்தார்.

''உனக்கு எவ்வளவோ பாக்கியங்கள் இருந்தாலும் என்ன பயன்? சௌந்தரியத்தை அநுபவிக்கும் பாக்கியம் மட்டும் இல்லை'' என்று சொல்லிக் கொண்டு நாக நந்தி எழுந்தார்.

சகோதரர்கள் இருவரும் ஒத்த வயதுடைய ஆத்ம சிநேகிதர்களைப் போலக் கைகோத்துக் கொண்டு வெளியே சென்றார்கள்.

## நாற்பதாம் அத்தியாயம்

# அஜந்தா அடிவாரம்

'சூரியன் மறைந்தால் என்ன? அதோடு உலகம் அஸ்தமித்துப் போய்விடுமா? இதோ நான் ஒருவன் இருக்கிறேனே' என்று பறையறைந்து கொண்டு கீழ்த்திசையில் பூரண சந்திரன் உதயமானான்.

நெடிதுயர்ந்த இரண்டு பனைமரங்களுக்கு நடுவே தங்க ஒளி பெற்றுத் திகழ்ந்த சந்திர பிம்பமானது, மரச் சட்டமிட்ட பலகணியின் வழியாக எட்டிப் பார்க்கும் நவயௌவன நாரீமணியின் பொன் முகத்தையொத்து இன்பவடிவமாய் விளங்கியது. புத்த பிக்ஷுவுக்கு அந்த முகம் சிவகாமியின் முகமாகவே காட்சியளித்தது.

நாகநந்தியும் புலிகேசியும் கூடாரத்துக்கு வெளியே வந்து ஒரு மொட்டைப் பாறையின் மீது உட்கார்ந்தார்கள்.

''அண்ணா! என்ன யோசிக்கிறாய்?'' என்று புலிகேசி கேட்டார்.

''தம்பி! இன்றைக்கு நான் கூடாரத்துக்குள்ளே வந்தபோது உன்னைப்போல் உடை தரித்துக் கொண்டு வந்தேனல்லவா?

## அருள்வாக்கு



மனம் இருக்கும் வரை ஆசைகள் இருக்கத்தான் செய்யும். அதனால் மனத்தை அடக்கி விட வேண்டும். மனம் அடங்கி விட்டால் மரண நிலையில் இருப்பது போல் ஒரு சக்தியுமின்றி, ஜடம் மாதிரி ஆவோம் என்று எண்ணக்கூடாது. மாறாக இதுதான் சகல சக்திகளுக்கும் ஆதாரமான நிலை. சாதாரணமாக ஏதாவது ஓர் அங்கத்தில் ஊனம் உள்ளவர்களுக்கு, இன்னோர் அங்கத்தில் அதிக தீக்ஷண்யம் இருக்கும். பல வாய்க்கால்களில் ஒன்றில் ஜலத்தை அடைத்துத் திருப்பினால், இன்னொன்றில் அதிகம் நீர் பெருகுவது போல், ஓர் அங்கத்தில் ஊனம் இருப்பதே இன்னொன்றில் தீக்ஷண்யத்தைத் தருகிறது. ஆத்ம சக்தியைப் பலவாறாகச் சிதறச் செய்யும் எல்லா இந்திரியங்களையும் அடைத்துக் கொண்டு விட்டால், அப்போது சகல சக்திகளும் ஒரே இடத்தில் அமைதியாக, ஆனந்தமாகக் கூடி நிற்கும். மிகுந்த சக்தியுடன் உலகுக்கு நல்லது செய்யலாம்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்காரச்சாரிய சுவாமிகள்.**

இதே மாதிரி முன்னொரு தடவை உன்னைப் போல் வேஷம் தரித்துக் கொண்டேனே, உனக்கு ஞாபகம் இருக்கிறதா?''

''அதை எ ப் ப டி மறக்கமுடியும், அண்ணா? ஒருநாளும் முடியாது.''

''இல்லை, இருபத்தைந்து வருஷம் ஆகி விட்டதே; ஒருவேளை மறந்து விட்டாயோ என்று நினைத்தேன்.''

''இருபத்தைந்து வருஷம் ஆனால் என்ன? இருபத்தைந்து யுகம் ஆனால் என்ன? இந்தப் பிறவியில் மட்டுமல்ல, எத்தனை பிறவி எடுத்தாலும் மறக்கமுடியாது, அண்ணா!''

''முதன் முதலில் நாம் சந்தித்தது நினைவிருக்கிறதா, தம்பி!''

''ஏன் நினைவில்லை? சித்தப்பன் மங்களேசனுடைய கடுஞ்சிறையிலிருந்து தப்பி ஓடிவந்தேன். அந்தப் பாதகனுடைய வீரர்களுக்குத் தப்பி ஒளிந்து, காட்டிலும் மலையிலும் எத்தனையோ நாள் திரிந்தேன். ஓடி ஓடிக் கால்கள் அலுத்துவிட்டன. உடம்பும் சலித்துவிட்டது. பசியும் தாகமும் எவ்வளவு கொடுமையானவை என்பதை உணர்ந்தேன். கடைசியில் ஒருநாள் களைப்படைந்து மூர்ச்சையாகிவிட்டேன். மூர்ச்சை தெளிந்து எழுந்தபோது என்னை நீ மடியில் போட்டுக் கொண்டு, என் வாயில் ஏதோ பச்சிலைச் சாற்றைப் பிழிந்து கொண்டிருந்தாய். நீ மட்டும் அச் சமயம் தெய்வாதீனமாய் அங்கு வந்திராவிட்டால் என் கதி என்ன ஆகியிருக்கும்? அண்ணா! அவ்வளவு சிரமம் எடுத்து என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று உனக்கு எதனால் தோன்றிற்று?''

''எனக்கு விவரம் தெரிந்த நாள்முதல் நான் அஜந்தா மலைக் குகையில் புத்த பிக்ஷுக்களுடன் வாழ்ந்து கொண்டு வந்தேன். சித்திரக் கலை, சிற்பக் கலை முதலியவை தெரிந்து கொண்டிருந்தேன். ஆயினும் அடிக்கடி என் மனம் அமைதியிழந்து தவித்தது. வெளி உலகத்துக்குப் போக வேண்டுமென்றும் என்னையொத்த வாலிபர்களுடன் பழக வேண்டுமென்றும் ஆசை உண்டாகும். சில சமயம் பெரிய பிக்ஷுக்களுக்குத் தெரியாமல் நதி வழியைப் பிடித்துக் கொண்டு மலைக்கு வெளியே வருவேன். ஆனால், அங்கும் ஒரே காடாக இருக்குமே தவிர மனிதர்கள் யாரையும் பார்க்கமுடியாது. இப்படி நான் ஏக்கம் பிடித்திருக்கையிலேதான் ஒரு நாள் அஜந்தாவின் அடிவாரத்தில் உள்ள காட்டிலே நீ நினைவிழந்து படுத்துக் கிடப்பதைக் கண்டேன். அந்த நிமிஷத்தில் இருபது வருஷமாக என் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்த அவ்வளவு ஆசையையும் உன் பேரில் செலுத்தினேன். அந்த வயதில் நாடு நகரங்களில் உள்ள வாலிபர்கள் தங்களுடைய இளங் காதலிகளிடம் எத்தகைய அன்பு வைப்பார்களோ, அத்தகைய அன்பை உன்னிடம் கொண்டேன். பச்சிலையைச் சாறு பிழிந்து உன் வாயிலே விட்டு மூர்ச்சை தெளிவித்தேன்.''

''அண்ணா! உன்னை முதன் முதலில் பார்த்ததும் எனக்கும் அம்மாதிரியே உன் பேரில் அபிமானம் உண்டாயிற்று. தம்பி விஷ்ணுவர்த்தனின் பேரில் எனக்கு எவ்வளவோ ஆசைதான். ஆனாலும், அதைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு அதிகமான பாசம் உன்பேரில் ஏற்பட்டது....''

''உன்னைக் கண்டு பிடித்த அன்றைக்கு நான் அஜந்தா குகைக்குத் திரும்பிப் போகவில்லை. அடுத்த இரண்டு மூன்று நாளும்

போகவில்லை. புது மணம் புரிந்த காதலர்கள் இணைபிரியாமல் நந்தவனத்தில் உலாவுவதுபோல் நாம் இருவரும் கை கோத்துக் கொண்டு காட்டிலே திரிந்தோம். நீ உன்னுடைய வரலாற்றையெல்லாம் எனக்கு விவரமாகச் சொன்னாய். நாம் இருவரும் அப்போதே மங்களேசனைத் துரத்தியடித்து வாதாபி இராஜ்யத்தைத் திரும்பக் கைப்பற்றும் மார்க்கங்களைப்பற்றி ஆலோசிக்கலானோம்.''

''இதற்குள் மங்களேசனுடைய ஆட்கள் என்னைத் தேடிக் கொண்டு அங்கே வந்து விட்டார்கள்.''

''தூரத்தில் ஆட்கள் .வரும் சத்தம் கேட்டதும் நீ பயந்தாய். 'அண்ணா! என்னைக் கைவிடாதே!' என்று கட்டிக் கொண்டாய். ஒரு நிமிஷம் நான் யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தேன். 'தம்பி! நான் சொல்கிறபடி செய்வாயா?' என்று கேட்டு உன்னிடம் வாக்குறுதியொன்று வாங்கிக் கொண்டேன். பிறகு உன்னுடைய உடைகளை எடுத்து நான் தரித்துக் கொண்டேன். என்னுடைய ஆடையை நீ உடுத்திக் கொண்டாய். அதே சமயத்தில் அஜந்தா மலைக் குகைக்குள் புத்த சங்கிராமத்துக்குப் போகும் வழியை உனக்கு நான் சொன்னேன். அங்கே நடந்து கொள்ள வேண்டிய விதத்தையும் சொன்னேன். சற்றுத் தூரத்தில் இருந்த அடர்ந்த கிளைகள் உள்ள மரத்தின் மேல் ஏறி ஒளிந்து கொள்ளச் சொன்னேன்.''

''மரத்தின் மேல் ஏறி நான் ஒளிந்து கொண்டதுதான் தாமதம். மங்களேசனுடைய ஆட்கள் யம கிங்கரர்களைப் போல் வந்து விட்டார்கள். அவர்களுடைய தலைவன் உன்னைச் சுட்டிக்காட்டி, 'பிடித்துக் கட்டுங்கள் இவனை!' என்று கட்டளையிட்டான். என் நெஞ்சு துடியாகத் துடித்தது. 'எப்பேர்ப்பட்ட அபாயத்திலிருந்து தப்பினோம்' என்று எண்ணினேன். உன்னிடம் அளவற்ற நன்றி உணர்ச்சி உண்டாயிற்று.''

''தம்பி! நம்முடைய உருவ ஒற்றுமையை நான் அதற்கு முன்னமே தெரிந்து கொண்டிருந்தேன். நதியிலும் சுனையிலும் நாம் குளித்துக் கரையேறும்போது, தண்ணீரில் தெரிந்த நமது பிரதிபிம்பங்களைப் பார்த்து அறிந்து கொண்டிருந்தேன். அப்படித் தெரிந்து கொண்டிருந்தது அச்சமயம் உன்னைக் காப்பாற்றுவதற்கு ஏதுவாயிற்று.''

''அண்ணா! அந்தச் சம்பவமெல்லாம் எனக்கு ஞாபகம் இருக்கிறதா என்று கேட்டாயே! முன்பின் அறிந்திராத எனக்காக நீ உன் உயிரைக் கொடுக்கத் துணிந்ததை என்னால் எப்படி மறக்க முடியும்?'' என்று குரல் தழுதழுக்க உருக்கத்துடன் புலிகேசிச் சக்கரவர்த்தி கூறியபோது, அவருடைய கண்களிலே கண்ணீர் துளித்தது. 'ஆ! இதென்ன? நெஞ்சில் ஈரப் பசையற்ற கிராதகப் புலிகேசியின் கண்களிலும் கண்ணீரா? இது உண்மைதானா?' என்று பரிசோதித்துத் தெரிந்து கொள்வதற்காகப் பூரண சந்திரன் தனது வெள்ளிக் கிரணங்கள் இரண்டை ஏவ, அது காரணமாகப் புலிகேசியின் கண்ணில் எழுந்த நீர்த்துளிகள் ஆழ்கடல் தந்த நன்முத்துக்களைப் போல் சுடர்விட்டுப் பிரகாசித்தன.

(தொடரும்)



❒ அடுத்த வீட்டுக்காரர் ஒரு நாள் முல்லாவிடம் வந்து, ''முல்லா உங்கள் வீட்டில் கட்டியிருக்கும் கொடிக் கயிற்றைக் கொஞ்சம் இரவல் தந்தால் இன்று மாலையே திரும்பத் தந்து விடுவேன்'' என்று கேட்டார். ''நான் கொடியில் கோதுமையைக் காயப் போட்டிருப்பதால் உனக்கு கொடியை இரவல் கொடுக்க முடியாது'' என்று சொன்னார் முல்லா.

பக்கத்து வீட்டுக்காரர் மிகுந்த ஆச்சரியத்துடன், ''கொடிக்கயிற்றில் எவ்வாறு கோதுமையைக் காயப் போட முடியும்?'' என்று வினவினார்.

''ஒருவருக்கு இரவல் கொடுக்க விருப்பமில்லாத போது எதையும் செய்ய முடியும்'' என்று பதில் சொன்னார் முல்லா.

- ஆ. வளையாபதி

''இந்த விளம்பர போர்டு பார்த்தியா... மச்சி!''
''என்ன?''
''பல்லவன் 'புட்போர்டில்' சிறப்பான முறையில் தொங்க சூப்பர் பயிற்சி அளிக்கப்படும்! பயிற்சியாளர் வௌவால் வீரப்பன்!''

- பொழிச்சலூர் கலாதர்






# தோட்டம் நுழைந்த நரிகள்

வேலிக்கு அப்பால் நின்று
ஓலமிட்டன நரிகள்,
''சிச்சி! இது
விலக்கப்பட்ட கனி.''

எப்படியோ படல் விலக்கித்
திரைப்படத் தோட்டத்தில்
நுழைந்தது ஒன்று,
தொடர்ந்தன சில;

ஏழையின் வியர்வையைப் பாட
ஏ. ஸி. கேட்கின்றன;
எக்ஸ்ட்ராக்களின் இறுக்கத்தில்
இலக்கிய எவரெஸ்ட்டைத்
தேடுகின்றன;

குடிசையின் அவலங்கூற
நட்சத்திர ஹோட்டலின்
உச்சி மாடி வாசம்;
மதுவை ஒழிக்கக்
குடித்தால்தான் முடியுமாம்!

புகழப்படுபவனே வெட்கப்பட
வார்த்தைகளால் செய்யும் ஜாலம்
வாத்ச்யாயனர் தோற்றார்!

''முக்கனியின் முழுச்சுவையும்
பெற்ற பொற்கனி''யைத்
தின்ற பின்பு பெற்ற ஞானம்,
''ஆஹா! அவிழ்த்தெறிவோம்
தன்மான ஆடைகளை!''
என்னே, புதிய ஆதாம்கள்!

- தெ. சுந்தரமகாலிங்கம்.

# மறு கல்யாணம்



''மாப்பிள்ளை வூட்டுக்கு ஒரு தரம் போயிட்டு வந்தர்லாமின்னு இருக்கேன்....''

லீலா கணவனைப் பார்த்தாள். அவன் பார்வையில் எந்த மாப்பிள்ளை வீடு, இன்னமும் அவர்கள் மாப்பிள்ளை தானா, உறவு கொண்டாட முடியுமா என்ற கேள்விகள் தொக்கி நின்றன.

''என்ன இன்னமும் ஒறவைக் கொண்டாடிட்டு இருக்கன்னு பாக்கறயா....?''

''தேவையான்னு ஒரு நெனப்பு. அவ்வளவுதான்!''

''போகலாமுன்னு தோணிச்சு....''

''அவரு மறு கல்யாணம் பண்ணாதவரைக்கும் நெருடலோ, உறுத்தலோ இல்லாம போயிட்டு வரலாம். மறு கல்யாணம் பண்ணிட்டப்புறம் எந்தவித ஒறவும் இல்லை...''

சமீப நாட்களாகவே போய் வரவேண்டும் என்ற எண்ணம் கோபாலனுக்கு வலுத்துக் கொண்டிருந்தது. ஜெயா இறந்து ஆறு மாதங்களாகி விட்டன. கடைசியாய் நகைகளை வாங்கி வரச் சென்றதுதான். இப்போதும் நகைக்காகத்தான் செல்ல வேண்டும் என்பது ஏனோ அவருக்குச் சங்கடமளித்தது.

சென்ற முறை நகைகளைத் திருப்பிக் கொடுத்தபோது இரு கைவளையல்கள் குறைந்திருந்தன. வளையல்களை எண்ணிப் பார்க்கவில்லை கோபாலன். இருந்தாலும் மாப்பிள்ளையின் அம்மாவே சொன்னாள். ''ரண்டு கை வளையல்கள் கொறையுது. எங்க பொண்ணு ரேணுகா போட்டிட்டிருக்கா. அடுத்த தரம் அவ இங்க வந்தப்புறம் வாங்கி வெச்சுக் குடுக்கறோம். நாங்களே கொண்டுட்டு வந்து தந்திடறோம். கொஞ்சம் பொறுத்துக்கணும்.'' கோபாலன் எதுவும் பேசவில்லை. அவர்களாகவே சொல்கிறபோது மாற்று வார்த்தை தேவையில்லை என்றுதான் பட்டது.

''ஜெயாவுக்குப் பெரிய மனசு. தாராளம். பிச்சைக்காரங்க சோத்து நேரத்தில வந்து 'அம்மா'ன்னு சத்தம் போட்டுட்டா தட்டுலே இருக்கற சோத்தையும் அள்ளிப் போட்டுடற மனசு. புருஷன் வீட்டிலிருந்து ரேணுகா வந்து இங்க தங்கியிருக்கறப்பவெல்லாம் அவளோட நகைகளை ஒண்ணுரெண்டு கழட்டி ரேணுகா கழுத்திலெ போட்டுடுவா. ஏதாச்சும் விசேஷத்துக்குப் போகணும்ன்னா எதுக்கு வெறுங்கையோட போறேன்னு வளையல்களைப் போட்டுட்டுப் போகச் சொல்லுவா. பெரிய மனசுதான். பெரிய மனசும், இரக்கமுமா இருக்கறவங்கதான் ரொம்ப நாள் இந்த உலகத்திலே இருந்துட முடியாதே....''

ஜெயா விபத்துக்கு முன் - ரேணுகா ஊர் வந்தபோது வெளியில் போகிற சமயம் வாய்த்தபோது அவளின் இரு கைவளையல்களைக் கழற்றிக் கொடுத்துப் போடச் சொல்லி வற்புறுத்தினாள். ரேணுகாவும் கண்ணாடி வளையல்களைக் கழற்றிவிட்டுப் போட்டுக் கொண்டாள். ஜெயாவின் விபத்து. மரணம். வளையல்களைத் தராமல்

சுப்ரபாரதி மணியன்

ரேணுகா புருஷன் வீட்டுக்குப் போய் விட்டாள்.

இந்த ஆறு மாத இடைவெளியில் அம்மா வீட்டிற்கு ரேணுகா வந்திருக்க மாட்டாளா. அவர்களே கொண்டு வந்து கொடுப்பதாய்ச் சொன்னார்கள். காணோம். கேட்காத கடன் பாழ் என்கிற விதமாய்ப் பாழாகப் போய்விடக் கூடாது. தாமதம், கேட்கத் தடையாய் பல விஷயங்களைக் கொண்டு வந்து நிறுத்தி விடலாம். எதற்கும் சென்று கேட்டு விடலாம் என்று முடிவு செய்தார்.

''எதுக்கும் இன்னம் ரெண்டு பேர்த்தே கூட்டிட்டுப் போங்களேன்!'' என்றாள் மனைவி.

''எதுக்கு?''

''தனியாப் போயி அவங்க ஏதோ சொல்ல, நீங்க தடுமாற... மத்தியஸ்துக்கு யாராச்சும் இருந்தா நல்லாத்தானே இருக்கும்.''

''இப்போ பிரச்னைன்னு ஒண்ணுமில்லியே. இதிலே மத்தியஸ்தம் எங்கிருந்து வருது. கொண்டுட்டு வந்து தர்றோம்னாங்க. காணோம். போயி ஒரு வார்த்தை என்னன்னு கேட்டுட்டு மொகம் பாத்துட்டு வர்றது தானே...''

''எனக்கென்னமோ சங்கடமாத்தான் இருக்கு.''

''நம்ம பொண்ணைக் கல்யாணம் பண்ணிக்குடுத்து அவ ரெண்டு வருஷம் வாழ்ந்து, அப்புறம் சாகற வரைக்கும் எந்தப் பிரச்னையும் வந்ததில்லே. இதிலே இப்ப மட்டும் என்ன வரப் போறது... பாக்கலாம்....''

''பெண்ணே போயிட்டா... இதிலே இந்த ரெண்டு வளையல்க என்ன பெரிசு....''

''எதுக்கும் ஒரு வார்த்தை கேட்டுடலாமே... சின்னப் பொண்ணுக்காச்சும் ஆகுமில்லியா... ரெண்டு வளையல்க ஒன்றரை பவுனாச்சும் சேரும். நமக்கு இன்னொரு பொண்ணு இல்லாமெ இருந்தா இதெல்லாம் நெனைக்க வேண்டியது இல்லைதான்.''

கோபாலனுக்கு பஸ்ஸை விட்டு இறங்கி நடக்கையில் சற்று பதற்றமாகத்தான் இருந்தது. இதெல்லாம் எதுக்கு என்று மனசு கேட்டுக் கொள்கிற பதற்றம்.



நடை தொய்வாகவே இருந்தது. இதே வீதிகளில் ஜெயாவின் சிரிப்பும், வார்த்தைகளுமாய் எத்தனை சந்தோஷத்தை அனுபவித்திருக்கிறோம் என்றிருந்தது.

வீட்டுக் கதவு ஓரத்தில் சிறு தூண் போல இளைத்து நின்றிருந்தாள் மாப்பிள்ளையின் அம்மா. ''வாங்க சம்பந்தி வாங்க'' என்றாள். அவள் முகம் பிரகாசம் அடைந்து, மீண்டும் கறுத்தது. முக ரேகைகள் ஆறு மாதக் கஷ்டங்களைச் சொல்லின.

''யாருமில்லியா?''

''அவரு வெளிய போனாரு... பையன் ஆபீஸ் போயிருக்கான்.''

ஜெயாவின் படம் மாட்டியிருந்தது முன் அறையில். பிளாஸ்டிக் மாலையொன்றைச் சாத்தியிருந்தார்கள். அழகான பிரேம் ஜெயாவின் முகத்தைப் பிரகாசம் கொள்ளச் செய்திருந்தது. இன்னும் வீட்டில் ஜெயாவின் போட்டோவை மாட்டாதது நினைவு வந்தது.

''என்ன தேஜஸ் பாருங்க மொகத்திலே.... மகாலட்சுமி... இருந்த வரைக்கும்

மகாலட்சுமியாவே இருந்துட்டுப் போனா....''

அவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள். ஈரமினுமினுப்பு கண்களில் தெரிந்தது. கோபாலனுக்கு ஆறுதல் வார்த்தைகளும், நெகிழ்வான நினைவுகளும் கலந்து மௌனத்தை உண்டு பண்ணும், ஜெயாவைப் பற்றிப் பிறர் பேசுகையில். மீண்டும் மீண்டும் பொறுக்கியெடுத்த வார்த்தைகளைத்தான் சொல்ல வேண்டும். எதிர்ச் சுவரைப் பார்த்துக் கொண்டிருந்தார். வார்த்தைகளுக்காய்க் கண்கள் சுவரில் துழாவுவது போலிருந்தது.

''அவரு இருப்பாருன்னு நெனச்சு வந்தேன்.''

''வெளியே போனாரு. சாயங்காலம் ஆகுமுன்னாரு.''

''தம்பி எப்பிடியிருக்கு....''

''இருக்கான். சில சமயம் பேசறதேயில்லை. மௌனமாயிடறான். அவன் ரொம்பவும் நாளாகும் மீள்றதுக்கு....

''இன்னொரு கல்யாணம் பண்ணிக்கோன்னு பலபேரு நச்சரிக்கறாங்க. பொண்ணைப் பெத்தவங்க பொண்ணைக் கரையேத்திட்டாப் போதும்ன்னு வர்றாங்க. அவன் எதுக்கும் ஒத்துக்கலே. தெடமாத்தான் இருக்கான்...''

பேசுவதற்கு எதுவும் இல்லை என்பது போல் கோபாலன் உட்கார்ந்திருந்தார். வந்த விஷயத்தைச் சொல்வதற்குக் கூச்சமாக இருந்தது. எதிரில் இருப்பது ஆண் என்றால் சுலபமாக இருந்திருக்குமோ என நினைத்தார்.

''தம்பி ஆபீசுக்குப் போகணும்ன்னா எப்படி?''

''பாக்கணும்ன்னு இருக்கா. போன் பண்ணி சீக்கிரம் வரச் சொல்றேன்.''

''வேண்டாம். வரப்போ வரட்டும். தம்பி பஸ்லதான் போறாரா....''

''ஆமாங்க... ஏதாச்சும் வாங்கணும் சின்னதா டி.வி.எஸ். - 50 மாதிரியாச்சன்னு சொல்லிட்டிருக்கான். போன மாசம் சின்னதா ஆக்சிடண்ட் வேற.. பத்து நாள் வீட்லே கெடந்தான். எதுவும் வாங்க முடியலே.... அவன் சம்பாதனை பொண்ணுக்குப் பண்றதுக்கே சரியாயிருக்கு.....''

''கல்யாணம் பண்ணி வருஷத்துக்கு மேலே இருக்குமே....''

''இரண்டு வருஷமாகப் போகுது. ஜெயா வந்த நாலாம் மாசம். இன்னமும் அதைக் கொண்டா இதைக் கொண்டான்னு புருஷன் தொரத்திட்டிருக்கான்.''

ரேணுகாவின் மெலிந்த முகம் மனத்தில் வந்தது கோபாலனுக்கு. சோகை படிந்த உருவமாய்த்தான் அவள் உலாவி இருப்பதாய்ப் பார்த்த ஞாபகம்.

''பண்ணிப் பண்ணிச் சோர்ந்து போயிட்டம். எத்தனைதான் பண்றது...? மூணு மாசத்துக்கு முன்னே வந்தப்போ ஜெயாவோட வளையல்களைக் குடுன்னு கேட்டேன். கழட்டிக் குடுத்துட்டுப் போயிட்டா. போனா புருஷன் தொரத்துறான். இத்தனை நாளாப் போட்டிருந்தியா... உன்னதுதான்னு இருந்தேன். இப்ப இல்லீங்கறியே. போயி வாங்கிட்டு வான்னு தொரத்திட்டான். வேற வழியில்லாம அதைப் போட்டு அனுப்புனோம்.''

அவர் எதேச்சையாய் முகத்தைத் திருப்பி அவளைப் பார்த்தார். அவள் கைகள் கூப்பியிருந்தன. கண்களில் ஈர மினுமினுப்பு. உடம்பில் ஒரு வகையான நடுக்கம்.

''நாலஞ்சு மாசம் பொறுத்துக்கோங்க. பையன் எப்படியோ சம்பாதிச்சோ, கடன் வாங்கியோ வேற வளையல்க வாங்கிக் குடுத்துருவான். அதுவரைக்கும் பொறுத்துக்கணும். இதைச் சொல்றதுக்கு எப்படி அங்க வர்றதுன்னு மூணு மாசமாத் தத்தளிச்சுட்டு இருக்கோம். எப்படியும் திருப்பிக் கொடுத்துடுவோம்.''

''பரவாயில்லே... நான் அதைக் கேக்கறதுக்கு வர்லே.... சும்மா பாத்துட்டுப் போவோமுன்னுதான்....''

''வளையல்களுக்காக வந்துட்டீங்கன்னு ஒரு நெனப்பு மனசிலே வந்துருச்சு. சின்னப் பெண்ணுக்கு ஏதாச்சும் காரியம் ஏற்பாடு பண்ணிட்டீங்களோ என்னமோன்னு நெனச்சேன். இதுவும் தேவையாயிருக்குமில்லையான்னு....''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே. அவ இன்னமும் ரொம்பவும் சின்னவதான்.''

நின்று கொண்டிருந்தவள் ஆசுவாசப்படுத்திக் கொள்வது போல் நாற்காலியின் முனையில் உட்கார்ந்தாள்.

''ரேணுகா வாழ்க்கைதான் சோகப்படலே.... அவ புருஷன் அதைக் கொண்டா இதைக் கொண்டான்னு சிரமப்படுத்தறான். பையன் சம்பாத்யத்துல பெருசா அவளுக்குப் பண்ண முடியலே. சாகாமே நடமாடிட்டிருக்கான். பையனுக்கு இன்னொரு கல்யாணம் பண்றதுனாலே வர்ற பணம், நகைய வெச்சாச்சும் ரேணுகாவைக் கரையேத்தணும்கற எண்ணம் அவருக்கும் அப்பப்போ வந்திட்டிருக்கு....''

மறுகல்யாணம் செய்வதற்காக அவள் சொன்ன காரணம் துயரம் தருவதாக இருந்தது. இனியொருமுறை இந்த வீட்டிற்கு வர அவசியம் இருக்காது என்று நினைத்துக் கொண்டார்.

# ரிக்ஷா மாமா

இயக்குனர் பி. வாசு அவர்களுக்கு,

தங்களுடைய 'ரிக்ஷா மாமா' படம் பார்த்தேன். படம் படு விறுவிறுப்பு. திரைக் கதை அமைக்கும் தங்கள் திறமை நிகழ்ச் சிகளைப் பிரவாகமாக முட்டி மோதி ஓடச் செய்து, குறைகள் நெஞ்சில் பதிய அவ காசம் இல்லாமல் செய்து விடுகிறது. அந்த வகையில் பாராட்டுக்கள். ஆனால்...

படம் பார்த்து வெளியே வந்தபின், நிதானமாக அசைபோடும் போதுதான் நிறைகளும் குறைகளும் இனம் பிரிந்து தெரிகின்றன.

கதை மாந்தர்கள் ஒவ்வொருவருமே ஏற்கெனவே பல படங்களில் அமைக்கப் பட்ட பாத்திரப் படைப்புகள். பண்பும் பாச மும் இரக்கமும் இனிமையும் கொண்ட ரிக்ஷாக்காரன், அவன் மீது காதல் கொள்ளும் பணக்காரப் பெண், பிடிவாத மும் முரட்டுத்தனமும் கொண்ட அவள் தந்தை, அந்த ரிக்ஷாக்காரனின் வாழ்க் கையில் குறுக்கிடும் - பிளாக் மார்க்கெட் டிக்கெட் விற்கும் - அந்தப் பெண், பணக் காரனை பிளாக்மெயில் செய்து தன் காரியத் தைச் சாதித்துக் கொள்ள முடியும் வில்லன்... பலமுறை பார்த்துப் பார்த்து அலுத்துப் போன - தமிழ் சினிமாவின் கதை வறட்சியை வலியுறுத்தும் பா த் தி ர ப் படைப்புகள்.

இருந்தாலும் ஓர் ஆறுதல். படத்தின் வெற்றிக்குத் தாங்கள் கிராமத்து மண் வாசனை என்கிற பெயரில் அமைக்கப் படும் அபத்தமான சூழலையும் அம்மன் கோயில் தீமிதியையும் நம்பவில்லை.

நெகிழவைக்கும் பாத்திரங்கள் இரண்டு. அன்புக்கு ஏங்கித் தவிக்கும் குழந்தை பேபி ஸ்ரீதேவி. திருஷ்டி சுற்றிப் போட வேண் டும். தமிழ்த் திரைக்கு இன்னுமொரு நட்சத்திர வாரிசு அறிமுகம். மற்றது, அமைச்சர் நாகேஷ். மிக மிக நயமான, இயல்பான வெளிப்பாடுகள்.

அதென்ன சார், ராதாரவிக்கு 'சந்திர லேகா' காலத்துப் பாணி உடை! 1992க்குக் கொஞ்சமும் பொருந்தவில்லையே! இது தான் இப்படியென்றால், குழந்தை ஸ்ரீதேவி யைக் கயிற்றைக் கட்டித் தண்ணீர்த் தொட்டி யினுள் தொங்க விட்டுக் குழாய்களைத் திறந்து விட்டு அவளை மூழ்கடிக்க அவர் முயலுவதும், அ வ ள் இருப்பிடத்தைக் கண்டுபிடிக்க முடியாமல் போகும் சத்ய ராஜ் சோக கீதமிழைக்க, அவர் குரலைக் கேட்டு அந்தக் குழந்தை 'ரிக்ஷா மாமா' என்று கூவித் தன்னுடைய இருப்பிடத்தை வெளிப்படுத்துவதும் அதைவிட 'ஹைதர்' காலம்.

பாடல்கள் ஓகோ என்றால் 'ரீகார்டிங்' ஓகோகோ. படப்பிடிப்பும் அப்படியே.

படம்... பழைய கள் - புதிய மொந்தை.

இப்படிக்கு,
திரைப்பட ரசிகன்.

- சி. ஆர். கே.



# 14

அவனது பேச்சிலும் புன்னகையிலும் இருந்த அமானுஷ்ய வசிகரத்தில் மனசும் தேகமும் உருகி நின்றன. இது வெறும் பச்சாத்தாபம் இல்லை என்று அவள் உணர்ந்தாள். சோர்வு மிகுந்த நீண்ட பயணத்துக்குப் பின் இளைப்பாற இடம் கிடைத்தது போல ஒரு வினோதமான நன்றி உணர்வு அவளை ஆட்கொண்டது. சற்று முன் அவள் சந்தித்த உலகம் உண்மைக்குப் புறம்பானது. புத்தி பேதலித்த ஒரு சிறு பான்மையினரின் அகங்காரக் கும்பல். எதிரில் இருக்கும் இந்தப் பார்வையற்றவன்தான் நிஜம். கண்களைப் பொருத்துவதற்கு முன் மனுஷனைப் பற்றின கடவுளின் எதிர்பார்ப்பின் வடிவம் இவன். இவனது தூய்மைதான் நம்மை ஈர்க்கிறது....

''உட்காரு மீரா.''

கட்டிலிலேயே அவள் அமர முற்படுகையில், ''கட்டில்லே வேண்டாம், என்னுடைய ஜுரம் உனக்கு வரக்கூடாது. நாற்காலியிலே உட்காரு....'' என்று அவன் சொன்னபோது சங்கரின் நினைவு வந்தது. சங்கரும் பார்வையற்றவனாக இருந்திருந்தால் அவனுடைய குணமே வேறாகியிருக்கும் என்று அவள் நினைத்துக் கொண்டாள். கட்டிலுக்கு அருகில் இருந்த நாற்காலியில் அமர்ந்து, அவனுடைய கைகளை அவள் மீண்டும் பற்றிச் சிரித்தாள்.

''வந்தா என்ன? நீ ரெண்டு நாள் படுத்திருக்கிறமாதிரி நானும் படுத்துட்டுப் போறேன்.''

''வேண்டாம் வேண்டாம். உனக்கு உடம்புக்கு வரக் கூடாது'' என்றான் அவன் தீவிரமாக. ''அப்புறம் உன்னை இன்னும் ஒரு வாரத்துக்கு என்னாலே சந்திக்க முடியாது. ஏற்கெனவே பரீட்சைன்னு பத்து நாளா இந்தப் பக்கம் நீ வரல்லே.''

கறுப்புக்கண்ணாடிக்குப் பின்னால் அந்த ஒளியற்ற கண்கள் எப்படி இருக்கும் என்று அவள் யோசித்தாள். சாதாரணமாகக் கண் செய்யும் வேலையை இவனுடைய அதரங்கள் செய்வதாகத் தோன்றிற்று. சந்தோஷம், துயரம், பரிகாசம், அன்பு எல்லாவற்றையும் சிறு சிறு அசைவுகளில், மாறாத அந்தப் புன்னகையில் அவன் துல்லியமாக வெளிப்படுத்துவது விந்தை என்று அவள் அதிசயித்தாள். ஆனால் இன்று இவனிடம் ஒரு மாறுதல் இருந்தது. வழக்கமான தன்னம்பிக்கையும் ஆசானைப் போன்ற தத்துவப் பேச்சும் இல்லை.

''பரீட்சையின் போது நீ வரணும்னு நா எதிர்பார்க்கல்லே'' என்றான், அவன் அவசரமாக. ''என்னை நீ பார்க்க வர்றது ஒரு கட்டாயம் என்கிற எண்ணம் கூட உனக்கு இருக்கக்கூடாது.''

அவன் உணர்ச்சிவசப்படுவதன் காரணம் விளங்காமல், அவள் திகைத்தாள்.

''ஏ, ஹரி, கமான்'' என்று அவன் கையை சிநேகிதமாகத் தட்டினாள். ''நீ என்னுடைய சிநேகிதன். உன்னைப் பார்க்கணும்னு நானா சந்தோஷமா வர்றேன். கட்டாயம்னு எதுக்குத் தோணணும்?''

''குருட்டுப் பய பாவம்னு -''

''ஷட் அப் ஹரி. நீ பார்வையில்லாதவன் என்கிற எண்ணமே எனக்கு இருக்கிற தில்லே.''

அவன் உணர்ச்சி வசப்பட்டுப் போனது, பதில் ஏதும் சொல்லாமல் உதட்டைக் கடித்தபடி குனிந்த தலையுடன் அமர்ந்திருந்ததில் தெரிந்தது. 'நன்றி' என்று சொல்வது போல் அவன் அவள் கைமேல் தன் கையை அழுத்திக் காண்பித்தான். கண் கலங்குகிறான் என்று தோன்றிற்று.

''ஹரி, என்ன ஆச்சு உனக்கு இன்னிக்கு?'' என்றாள் மென்மையாக. ''கண் இல்லேங்கறது எனக்குப் பெரிய குறையாத் தெரியல்லேன்னு சொல்லுவியே?''

அவன் தலை குனிந்த நிலையிலேயே தனக்குள் முணு முணுத்துக் கொள்வது போல் சொன்னான்.

''உடம்பு ஆரோக்கியமா இருக்கும் போது தன்னம்பிக்கை இருக்கு. உடம்பு பலவீனமாப் போனா மனசும் பலவீனமாயிடுது. பார்வை இல்லாதவனுக்கு உடம்பு சரியில்லாம போனா ரொம்ப பயங்கரம் மீரா.

உனக்கு வேடிக்கையா இருக்கும். இருட்டுன்னா என்னன்னு அப்பத்தான் எனக்குத் தெரியுது. அம்மா ஸ்கூலுக்குப் போயிருந்த சமயத்திலே எனக்கு ரொம்ப ஜுரம். எத்தனை பயந்து போனேன்னு உனக்கு நா எப்படிச் சொல்வேன்?''

மீராவிற்குக் கண்களில் நீர் நிறைந்து போயிற்று.

''நானும் பயந்து போவேன் ஹரி'' என்றாள் அவள் சற்றுச் சமாதானமாக ''அமெரிக்காவிலே ஒரு முறை ஜுரம் வந்தது. நா செத்துப் போயிடுவேன்னு பயந்தேன்.''

அவனுடைய அதரங்களில் ஆச்சரியகரமாகப் புன்னகை அரும்பிற்று. ஆசானைப் போன்ற பாவனை தெரிந்தது.

''சாவைப் பத்தி எனக்கு பயமில்லை. பார்வை உள்ளவங்களுக்கு இருக்கிற பயம் எனக்கு இல்லே. சாவு என்கிறது உங்களுக்கெல்லாம் திசை தெரியாத இருட்டு மாதிரி. எனக்கு எந்த வித்தியாசமும் இல்லே. ஒரு இருட்டிலேந்து இன்னொரு இருட்டு - ஒரு வேளை அது இன்னும் சுவாரஸ்யமா இருக்கலாம். யாருக்கும் நா பாரமில்லே என்கிற நிம்மதியினாலே -''

''ஹரி. ப்ளீஸ் இப்படியெல்லாம் பேசாதே. யாரும் உன்னை பாரமா நினைக்கல்லே.''

''அப்படி நினைக்கல்லேங்கறது கூட ஒரு சுமை மீரா.''

''யூ மஸ்ட் பீ க்ரேஸி ஹரி!'' என்றாள் அவள் உத்வேகத்துடன். ''ப்ரியம் என்கிறது உனக்குச் சுமையா? எனக்கு உன் மேல் ப்ரியம் இருக்கிறதனாலேதான் நா வரேன். உன்னோடு பேசும் போது எனக்கு சந்தோஷம் ஏற்படறது. இல்லேன்னா வீட்டுக்குப் போகணும்னு நினைச்சவ இங்க எதுக்கு வரணும்? நீ செஞ்ச பிரார்த்தனையினாலேன்னு சொல்லாதே.''

அவன் அதரங்களில் மீண்டும் புன்னகை விரிந்தது.

''தீவிரமான எண்ணமும் பிரார்த்தனையும் ஒண்ணுதான் மீரா. எண்ணங்களுக்குச் சக்தி உண்டு. குருட்டு ராஜா திருதராஷ்ட்ரன் பீமனை அணைச்ச போது என்ன ஆச்சு தெரியுமா?''

''தெரியும்! நீ திருதராஷ்ட்ரன் இல்லே; கிருஷ்ணாவதாரம். ஹரி.''

ஹரி வாய் விட்டுச் சிரித்தான்.

''நான் உன் சன்னிதிக்கு வந்திருக்கிறவ'' என்றாள் மீரா தொடர்ந்து.

ஹரி கைகொட்டிச் சிரித்து



''பலே! உன் பக்தியை மெச்சினோம் மீரா!'' என்று அபய ஹஸ்தம் காட்டியதும் இருவரும் பெரிதாகச் சிரித்தார்கள்.

''தமிழ்லே நிறைய முன்னேறிட்டே'' என்று அவன் சிலாகித்தபோது, ''எல்லாம் உங்க ஆசி சுவாமி'' என்றாள் அவள் வினயத்துடன்.

அவன் மீண்டும் பெரிதாகச் சிரித்தான்.

''மீரா!'' என்று உள்ளேயிருந்து மைதிலியின் குரல் கேட்டது. ''உங்க ரெண்டு பேருக்கும் போர்ன்விடா கலந்திருக்கேன் எடுத்திட்டுப் போ.''

''இதோ வரேன்'' என்று மீரா துள்ளிக் கொண்டு உள்ளே ஓடினாள்.

**வாஸந்தி**

மைதிலி தயாராக வைத்திருந்த டிரேயை ''தாங்க்யூ மேம்'' என்று வாங்கிக் கொள்கையில், மைதிலி அவள் தோளை அன்புடன் அழுத்தினாள்.

''நீ வந்தது எனக்கு ரொம்ப சந்தோஷம் மீரா. ரெண்டு நாளா ஹரி ரொம்பச் சோர்வா இருந்தான்.''

''எனக்கு நீங்க போன் பண்ணியிருக்கலாம் மேம். அல்லது ஸ்கூல்லே சொல்லியிருக்கலாம். நேத்தே எனக்குப் பரீட்சை முடிஞ்சுடுத்தே!''

''அப்படி நா சொல்றதை ஹரி விரும்ப மாட்டான் மீரா.''

''எனக்குப் புரியறது'' என்று மீரா நடந்தாள். இன்றைய பார்ட்டியைப் பற்றி மைதிலியிடம் பிறகு சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள். பார்ட்டியின் நினைவு மீண்டும் ஓர் அவமான உணர்வை ஏற்படுத்திற்று. போர்ன் விடாவை அவளிடமிருந்து வாங்கிக் கொள்ளும்போது, ''இன்னிக்கு சனிக்கிழமை ஆச்சே, டான்ஸ் கிளாஸ் இல்லே?'' என்றான் ஹரி.

''இருக்கு, பரீட்சை சமயமானதாலே சாயங்கால கிளாஸ் இன்னிக்கு.''

''காலையிலே நீ போனது டான்ஸ் கிளாசில்லையா?''

''இல்லே.''

இவனிடம் அதைப்பற்றிப் பேசுவது அவசியமில்லை என்று அவள் நினைத்துக் கொண்டாள். இவன் அதிர்ந்து போவான், அல்லது புரியாமல் தவிப்பான். இவனுடைய அறிவு, புத்தகங்களிலிருந்தும் அவனைச் சுற்றி இருக்கும் குறுகிய வட்டத்து உலகத்து ஓசைகளின் கிரகிப்பிலிருந்தும் வளர்ந்தது. சங்கருடைய உலகத்தின் மெத்தனமும் அகங்காரமும் இவனுக்குப் புரியாது. அந்த அநாகரிகத்தை இவன் தெரிந்து கொள்ளாமல் இருப்பது நல்லது.

''நா இங்க இருக்கேன்னு அம்மாவுக்கு போன் பண்ணிச் சொல்லணும்'' என்று அவள் அப்பொழுதுதான் நினைவு வந்தவளாய் எழுந்தாள். ஹரியின் வீட்டிலிருந்து பேசுவதாகச் சொன்னதும் அம்மா ஆச்சரியப்பட்டாள். ''பார்ட்டி முடிஞ்சுடுத்தா?'' என்றாள். ''இல்லே. நா கிளம்பிட்டேன். எனக்கு அங்க ஒண்ணும் பிடிக்கல்லே. நேரிலே சொல்றேன். நா இங்கேயிருந்தே டான்ஸ் கிளாஸுக்குப் போயிட்டு வரேன்மா. இஸ் இட் ஓ. கே?''

''ஓ.கே. ஜாக்கிரதையா போயிட்டு வா'' என்றாள் அம்மா வழக்கம்போல. மீராவுக்குச் சிரிப்பு வந்தது. இன்று ஒரு 'ரேப்பிஸ்டிலிருந்து தப்பிச்சேன்' என்று அம்மாவிடம் சொல்லும்போது, அவளுடைய முகம் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்வது சுவாரஸ்யமாக இருந்தது.

ஹரியுடனும் மைதிலியுடனும் மேலும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுக் கிளம்பும்போது ''மறுபடி எப்ப வருவே?'' என்றான் ஹரி.

அவள் மைதிலியைப் பார்த்து சமிக்ஞையுடன் சிரித்து, ''அடுத்த சனிக்கிழமை'' என்றாள். ''தினமும் வரணும்னு நா ஆசைப்பட்டாலும், மேம் உதைப்பாங்க, ஒரு மாசத்திலே பெரிய பரீட்சை வருது'' என்று சிரித்தாள்.

''உண்மைதான்'' என்றாள் மைதிலி. ''ஸ்கூலுக்கு நல்ல பெயர் கொண்டு வருவேன்னு உன்னைத்தான் நம்பியிருக்கோம்.''

''இதுவும் ஒரு சுமை, இல்லே ஹரி?''

ஹரியின் சிரிப்பு வெகு நேரத்துக்கு அவளைத் தொடர்ந்து வந்தது. டான்ஸ் வகுப்புக்கு பஸ்ஸில் பயணம் செய்யும் போது ''ரொம்ப பயந்து போனேன்'' என்ற அவனது வார்த்தைகளின் நினைவு மீண்டும் மீண்டும் வந்து சங்கடப்படுத்தியது.

எதற்கு? நான்தான் பயப்படுகிறேன். குழம்பிப் போகிறேன். பார்வையில்லாதவர்கள் அதிர்ஷ்டம் செய்தவர்கள். எனக்கு ஏற்படும் அதிர்ச்சிகள் உனக்கு ஏற்படாது. பேதங்கள் அற்ற - கறுப்பு வெளுப்பு வித்தியாசமில்லாத உலகம் உன்னுடையது. வேடிக்கை - உன்னுடைய உலகத்தில்தான் வெளிச்சம் இருக்கிறது. அதில் ஒரு தத்துவம் அடங்கியிருக்கிறது.




❑ மதுரை அவப்பாண்டி பகுதியில் பார்த்த ஒரு ரிக்ஷா வண்டியின் பின்புறம் எழுதப்பட்டிருந்த வாசகம்: ''புரட்சித் தலைவி குஷ்பூ துணை!''

காலம் அப்படி இருக்கு!

- கே. சகுந்தலா




## பிச்சையிடுவதில் புதுமை!

பிச்சை எடுக்கும் நபர் காசு சேர்ந்ததும் சினிமா, மது, போதைப் பொருள் என்று தேடிப் போவது சர்வ சகஜமாக நடப்பதுதான். இதைத் தடுக்க ஒரு யோசனையைக் கையாள்கிறார்கள், அமெரிக்காவிலுள்ள பெர்க்லி மக்கள். 25 சென்ட் மதிப்புள்ள சீட்டுகளை வாங்கி வழங்குகிறார்கள். எங்கு வேண்டுமானாலும் உணவுக்காக மட்டுமே இதை மாற்ற முடியும். மற்ற விஷயங்களுக்குச் செல்லாது என்று அதிலேயே அச்சிடப்பட்டிருக்கும்!

- பு. விஜயலக்ஷ்மி

ஆதாரம் : பிஸினஸ் இண்டியா

◆

## செல்லோ! சௌக்கியமா?




❐ பம்பாய் நகரத்தில், டெலிபோன் உள்ள இல்லங்களில் தலைவிகள், பகல் முழுவதும் டெலிபோன் மணி அடிக்கும்போதெல்லாம் 'ஹலோ' என்பதற்கு பதில் 'செல்லோ' (cello) என்று கூறினார்கள். ஏன்? பிரபல செல்லோ தெர்மல் சாதன தயாரிப்பாளர்கள் திடீரென தங்கள் விருப்பப்படி டெலிபோன் நம்பர்களைச் சுழற்றுவார்கள்; யார் 'செல்லோ' என்று பதிலளிக்கிறார்களோ அவர்களுக்குப் பரிசு அளிப்பதாக அறிவித்திருந்தார்கள். அதன் விளைவுதான் இது!

நன்றி : பிசினஸ் வர்ல்ட்

தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்

---

அடுத்த முறை ஹரியைச் சந்திக்கும் போது இதைச் சொல்ல வேண்டும் என்று மீரா நினைத்துக் கொண்டாள்.

லலிதாங்கியின் வீட்டிற்கருகில் இறங்கி நடந்தபோது காலையில் ஏற்பட்ட அனுபவம் எல்லாம் நினைவில் மெல்ல மழுங்கிப் போயிற்று.

லலிதாங்கி தனியாக அமர்ந்திருந்தாள். மீராவைக் கண்டதும் சுவரில் இருந்த கடிகாரத்தைப் பார்த்துவிட்டு ''என்ன சீக்கிரம் வந்திருக்கே?'' என்றாள்.

முக்கால் மணி நேரம் தான் முன்னதாக வந்திருந்தது மீராவுக்கும் வியப்பாக இருந்தது.

''நேரத்தைச் சரியாக் கவனிக்காம வந்துட்டேன். அப்புறமா வரட்டுமா?''

''வேண்டாம் வேண்டாம் உக்காரு'' என்றாள் லலிதாங்கி உற்சாகமாக. இத்தனை பிரகாசமாக அவள் என்றும் இருந்ததில்லை என்று மீரா நினைத்துக் கொண்டாள்.

''மேம், நீங்க ரொம்ப அழகா இருக்கீங்க!''

லலிதாங்கி சட்டென்று அவளை நிமிர்ந்து பார்த்துச் சிரித்த போது, பத்து வருஷங்கள் உதிர்ந்தன.

''என்ன இன்னிக்குப் புதுசாப் பார்க்கறாப்பலே சொல்றே?''

''ஆமாம். இந்த அழகு புதுசாத் தெரியறது.''

லலிதாங்கி நாணங்கலந்த கலகலத்த சிரிப்புச் சிரித்தாள்.

''உனக்குப் பதினேழு வயசுதான்னு நம்ப முடியல்லே'' என்று அருகில் வந்து அவளுடைய கன்னத்தை நிமிட்டினாள். ''நாகராஜன் சொல்வாங்க, அமெரிக்கக் குழந்தைங்க பத்து வயசிலேயே முத்தப் பாவக்காயாப் பேசும்னு.''

அப்படியென்றால் என்ன என்று கேட்க நினைக்கையிலேயே ஊகமாய் அர்த்தம் புரிந்து புன்னகையுடன் மீரா கேட்டாள்.

''அந்த அங்கிள் எங்கே மேம்? வீட்டுக்கு வரேன்னு சொன்னார். வரவேயில்லே.''

''அவங்க மறுநாளே மதுரைக்குப் போகவேண்டி வந்துட்டது கண்ணு!'' என்ற லலிதாங்கியின் குரலில் புதிதாக நெருக்கம் தெரிந்தது.

''அந்த அங்கிளுக்கு உங்கமேல ரொம்பப் பிரியம்னு நினைக்கிறேன்'' என்றாள் மீரா தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள இயலாமல்.

லலிதாங்கி திடுக்கிட்டு அவளைப் பார்த்தாள். பிறகு பக்கென்று சிரித்தாள்.

''கடவுளே, இந்த ஊர்ப் பெண் எவளுக்கும் எங்கிட்ட இப்படிப் பேசத் துணிச்சல் இருக்காது!''

(தொடரும்)

வடசென்னை ரவுண்ட் அப் :

"நார்த் மெட்ராஸ்ல இருக்கிறவங்களை மனுஷங்களா யாரும் நினைக்கிறதாத் தெரியல்லே! ஏதோ ஆடு - மாடு மாதிரி கால்நடைகள் வசிக்கிற இடம்னுதான் அரசாங்கமும் சரி, கார்ப்பரேஷனும் சரி - நினைச்சுக்கிட்டிருக்கிற மாதிரி தோணுது!''

வட சென்னையை அலசப் புறப்பட்ட இரண்டாம் நாள் காலையிலிருந்து மாலை வரை பல இடங்களையும், பலதரப்பட்ட மக்களையும் பார்த்து, பேசி விட்டுக் கிளம்பிய போது, பாண்டியன் என்ற வட சென்னைவாசி முத்தாய்ப்பாகச் சொன்ன வார்த்தைகள் இவை. அந்தப் பகுதியின் நிலைமையை இதைவிடத் துல்லியமாகச் சொல்ல முடியாது என்கிற மாதிரிதான் நாம் பார்த்த இடங்களும் இருந்தன.

கட்டை வண்டிகள் எல்லாம் வழிநெடுக ஆக்ரமித்துக் கொண்டிருக்கின்றன. இங்கே வேலை செய்கிற வேலையாட்கள் வேறு இடம் தேடிப் போவதில்லை - டாய்லெட்டுக்கு; வசதியாகத் தெருவே இருக்கிறதே! இதை எல்லாம் வளைந்தும் நெளிந்தும் தாண்டியும் சர்க்கஸ் நடை நடந்துதான் தெருவில் போக வேண்டும். பழைய சட்டக் கல்லூரி மாணவர் விடுதியை அம்போ என்று விட்டு வைத்திருக்கிறார்கள்.

இதையொட்டி இருக்கும் கச்சாலீசுவரர் அக்ரகாரத் தெருவுக்குள் நுழையும்போதே மூக்கைப் பிடித்துக் கொண்டுதான் நுழைய வேண்டும். கோயில் சுவரும், குளமும் பப்ளிக் டாய்லெட்தான்.

இரண்டு தலைமுறைகளாக இங்கே குடியிருந்து வரும் லட்சுமிசுந்தரேசன் சொன்னார் : ''எங்கள் வீட்டுக் குழாயில்

# வடக்கு வாடுகிறது



கச்சாலீஸ்வரர் கோயில் குளம் : பப்ளிக் டாய்லெட்

## ''வீட்டுச் சிறை''

இரும்பு வியாபார கேந்திரமான செம்புதாஸ் தெரு வழியாக, அவ்வளவு எளிதாக யாரும் நடந்து வந்து விட முடியாது. இரவு, பகல் இரும்புச் சாமான்கள் சாலையை முக்கால் பகுதி அடைத்துக் கொண்டுதான் இருக்கின்றன. லாரிகள்,



லட்சுமி சுந்தரேசன்



☛ எம். சி. ரோட் ரயில்வே கேட் : எப்போதும் மூடியே இருக்கும்.

கழிவுநீர் செல்லப் புதிய குழாய்களை, ஒப்பந்த முறையில் போட ஏற்பாடு செய்தும், வேலை சீராகச் செய்யப்படாததால், பழையக் குருடி கதவைத் திறடி கதைதான்! மழைக் காலத்தில் கேட்கவே வேண்டாம். இமே யாரும் குடியிருக்கவே முடியாது!'' என்றனர் ராணி அம்மாள் முத்துக்குமாரசாமி தம்பதி. இவர்கள் வீடு கோடியில் இருப்பதால் தேங்கும் கழிவுநீர் முழுக்க இவர்கள் வீட்டு முன்னால்தான்!

''கார்ப்பரேஷன் வரி, மெட்ரோ வாட்டர் வரி எல்லாம்தான் செலுத்துகிறோம்'' என்று இவர்கள் பெருமூச்சு விட்டார்கள். அதற்கென்ன செய்ய, வரி செலுத்துவது மக்கள் கடமை; அடிப்படை வசதிகள் கூட செய்து தராமல் இருப்பது மாநகராட்சியின் உரிமை!

இருபது நாட்களாகச் சாக்கடைத் தண்ணீர் தான் வருகிறது. எத்தனையோ முறை விட்டாயிற்று... கோயிலையும் குளத்தையும் இங்கிருந்தபடியே தரிசித்துக் கொள்ள வேண்டியதுதான். தப்பித் தவறி வெளியே போக நேர்ந்து விட்டால் முதலில் கிடைக்கிற ஆட்டோவில் ஏறி, சாலையைத் தாண்டினால் போதும் என்கிற அளவுக்கு மோசமாகி விட்டது. வீட்டுக்குள்ளேயே சிறையிருக்கிற மாதிரியான அனுபவம்தான்!''

## ''கண்டுகொள்ளாத மாநகராட்சி!''

பிடாரியார் கோயில் இரண்டாவது சந்துக்குள் நுழையும் போது, உள்ளே இத்தனை வீடுகள் இருக்கும் என்று யாரும் நினைக்க முடியாது. உள்ளே நுழைந்தால் - 16 வீடுகள்! ''பல காலமாக, ஒழுங்காகச் சென்று கொண்டிருந்த கழிவுநீர்க் குழாய்களை, அடுத்துள்ள பி. ஆர். என். கார்டன் குடிசை மாற்று வாரியக் குடியிருப்புகள் கட்டி முடித்ததும், எந்தவித முன்னறிவிப்பும் இல்லாமல், திடீரென்று அடைத்து விட்டார்கள். அதனால் கழிவுநீர் தேங்கி, கழிவறைகள் அடைபட்டு பயங்கர அவதிப்பட்டோம். ஒவ்வொரு மாதமும் ஐம்பது, நூறு என்று செலவு செய்தும் பயனில்லை. சென்ற மே மாதம், எங்கள் குறைகளை ஒரு வழியாகக் கேட்டு, கழிவுநீர் அகற்றும் அதிகாரிகள், பிடாரியார் கோயில் தெரு வழியாகக்



☛ ராணியம்மாள் முத்துக்குமாரசாமி

## பெருந்தலைவரின் பெரிய மனசு

தமிழ்நாடு அரசினர் அச்சகத் தொழிலாளர் குடியிருப்பு காமராஜர் காலத்தில், அடுக்குமாடிக் கட்டடமாகக் கட்டிக் கொடுக்கும் யோசனை இருந்த போது, பெருந்தலைவர் சொன்னாராம் : ''39 ஏக்கர் நிலம் இருக்கிறது. முந்நூறு குடியிருப்புக்கள்தானே? தனித்தனி வீடாக, முன்னாலும் பின்னாலும் நிறைய இடம் விட்டு, தோட்டம் எல்லாம் போட்டுக் கொள்ளும்படி வசதியாகக் கட்டிக் கொடுங்கள்!''

முதலில் பர்மா தமிழர்கள் பத்துப் பேருக்கு, வேறு வழியின்றி, இங்கே இடம் கொடுக்கப் போக, இப்போது சுமார் இரண்டாயிரம் குடும்பங்கள் சேர்ந்து, அனுமதியின்றிக் குடியிருந்து கொண்டிருக்கிறார்கள்! அரசே கட்டிக் கொடுத்துக்

குடியமர்த்திய, அச்சகத் தொழிலாளர் குடும்பங்கள், மைனாரிடியாகி, வாய் மூடி மௌனமாகக் கொடுமைகளை அனுபவித்து வருகின்றனர். இது ஒருபுறம் என்றால், இந்த வீடுகளின் நிலைமை எப்படி? மின்சாரப் பராமரிப்பு ஒழுங்காக இல்லாததால், பல இடங்களில், சுவரில் ஷாக் அடிக்கும் நிலைமை!

எதிரே பார்க் என்ற பெயரில் ஒரு பூங்கா. அதில் நிழலான பல காரியங்கள் நிகழ்கின்றன. போலீஸ் கண்டுகொள்ளுவதே இல்லையாம்!

## பாலம் வீணாக்கும் நேரம்

ஜனதா தலைவர்களில் ஒருவரான ஆறுமுகசாமி, தம்புச் செட்டித் தெருவையும், மன்னார்சாமி கோயில் தெருவையும் இணைக்கும் முக்கியமான ராயபுரம் மேம்பாலம் எப்படி நாள்தோறும் மக்களின் இரண்டு மணி நேரத்தை வீணாக்குகிறது என்று விளக்குகிறார். "1853-ல் கட்டிய மேம்பாலம் இது. இருபுறமும் ஊழியரைக் கொண்டு செல்லும் தொழிற்சாலை பஸ்கள், லாரிகள், டிராக்டர்கள், கார்கள், ஸ்கூட்டர்கள், பல்லவன் பஸ்கள் ஊர்ந்து போகும் நிலை என்று மாறும்?" என்று கேட்கிறார். "இத்தனைக்கும், இந்தப் பாலத்தை அகலப்படுத்த, தமிழக அரசு 13 கோடி ரூபாய் ஒதுக்கீடு செய்திருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. தொடக்க வேலைகள் எதுவுமே காணப்படவில்லையே?"

## ரயில்வே கேட்டுக்குப் பலி!

நிதி ஒதுக்கீடு இருந்தும் வேலை தொடங்கப்படாத இன்னொரு திட்டம், ஸ்டான்லி மருத்துவக் கல்லூரிக்கும், ஸ்டான்லி மருத்துவமனைக்கும் இடையே - ராபின்சன் பார்க்குக்கு அருகில் - எம். சி. ரோடில் ரயில்வே கேட்டுக்குப் பதில் அமைக்கப்பட வேண்டிய சப்வே. நாளின் பெரும்பகுதியும் இந்த ரயில்வே கேட் மூடியே இருக்கிறது! வடசென்னையிலிருந்து வணிகப் பொருட்கள் பல, இந்தப் பாதை வழியாகத்தான் கொத்தவால்சாவடிக்கும், சென்னையின் பிற பகுதிகளுக்கும் எடுத்துச் செல்லப்படுகின்றன. அவசர நோயாளிகள் பலர் மருத்துவமனைக்குள் நுழைய முடியாமலே- ரயில்வே கேட்டுக்கு வெளியிலேயே - பிராணனை விட்டிருக்கிறார்கள் என்பதைக் கேட்ட போது அதிர்ச்சியாக இருந்தது.

## ஓடாத லாரிகள்

சென்னைத் துறைமுகத்தை அடுத்து இருக்கும் சாலைகள் பலவற்றில், போக்குவரத்துக்கு இடைஞ்சலாக ஓடுகிற லாரிகள், ஓடாத லாரிகள், ரிப்பேர் செய்யப்படுகிற லாரிகள், பெயின்ட் அடிக்கப்படுகிற லாரிகள் என்று பலவகை. "போக்குவரத்துக் காவல்துறையினருக்கு லாரி உரிமையாளர்களால் மாதா மாதம் மாமூல் வழங்கப்படுகிறது!" என்கிறார் ஒரு பிரமுகர். அதுதான் போகட்டுமென்றால், நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் லாரிகளை மறைவிடங்களாகப் பயன்படுத்திப் பொது மக்கள் மலஜலம் கழித்து நாறடிக்கச் செய்வது அதிபயங்கரம்!

## ஆபத்தான சூழ்நிலை

பேசின் பிரிட்ஜிலிருந்து எண்ணூர் போகிற ரயில் பாதையின் இருபுறமும் ஆயிரக் கணக்கில் குடிசைகள். இவர்கள் பகுதி தீ விபத்தில் பாதிக்கப்பட்டாலோ, வெள்ளத்தில் சிக்கிக் கொண்டாலோ, உடனே உதவிக்கு வர ஒரு மேம்பாலமோ, சுரங்கப் பாதையோ கிடையாது! வோட்டுக்களை அள்ளி வழங்கும் இந்தப் பகுதியை, தேர்தல் முடிந்ததும் கைகழுவி விடும் அரசியல்வாதிகள், எப்போது அரசின் பார்வைக்குக் கொண்டு செல்லப் போகிறார்களோ?

## அடைபட்ட சுரங்கப்பாதை

வால்டாக்ஸ் சாலையில், சென்ட்ரல் ஸ்டேஷன் வாயிலை ஒட்டிக் கட்டப்பட்டுள்ள சுரங்கப் பாதையின் நுழைவுப் பகுதிகளில் ஆட்டோக்களும், சைக்கிள் ரிக்ஷாக்களும் சூழ்ந்து மூடிக் கொண்டிருக்கின்றன. (சுரங்கப் பாதையை மக்கள் உபயோகிக்க விடக் கூடாது என்ற லட்சியமோ என்னவோ?) இங்கே பஸ் ஸ்டாப்பில் பல்லவன் எப்படி நிற்க முடியும்? அப்படியே நின்றாலும் ஏறி விடுவது சிரம சாத்தியம்!

## குட்டி ஏரி

"பெரம்பூர்ப் பகுதிகளில், மழை நாட்களில் தண்ணீர் தேங்கி, அதனுடன் சாக்கடை நீரும் சங்கமம் ஆகி, குட்டி ஏரி மாதிரி காட்சி அளிக்கும்" என்கிறார் ராகவேந்திரன். "பி. பி. ரோடு, சுப்பிரமணியம் தெரு, குமாரசாமி தெரு நிலை எல்லாம் இதே கதைதான். "வியாசர்பாடி மக்கள்

கதை கதையாகச் சொல்லுவார்கள்!'' என்கிறார். ஆர்ட்டிசான் குடியிருப்போர் பொது நலச் சங்கத்தைச் சேர்ந்த செல்வராஜ், வியாசர்பாடி மகாகவி பாரதி நகரை அடைய, சாலை வசதியும், பஸ் வசதியும் தேவை'' என்கிறார். (''பாரி முனையிலிருந்து இங்கு வர இரண்டு மணி நேரம் ஆகிறது!'')

## குவியும் குறைகள்

● இந்தப் பதினைந்து ஆண்டுகளில், கொளத்தூரின் மக்கள் தொகை நாலு மடங்கு பெருகியிருக்கிறது. ஆனால் அடிப்படை வசதிகள் பெருகவில்லை. மாநகராட்சியின் கீழ் கொண்டு வரப்பட்ட பிறகாவது விமோசனம் பிறக்க வேண்டாமா? அதுதான் நடக்கவில்லை!

● வெற்றிநகர் கோபாலபுரம் 3ஆவது தெரு மீது மாநகராட்சிக்கு ஏராளக் கோபமோ, என்னவோ சுத்தமாகக் கவனிப்பதில்லை. ரோடு, கிணற்றுக்கு மருந்து, பெயர்ப் பலகை, தெரு விளக்குகள், குடிநீர்க் குழாய் - அட, குறைந்த பட்சம் வீட்டுக்கு வீடு எண்ணாவது போடுதல்? ஊஹும். எதுவுமில்லை!

● வியாசர்பாடியைச் சேர்ந்த சர்மா நகர், சாஸ்திரி நகர், பக்தவத்சலம் காலனி பகுதிகளில் வசிக்கும் பர்மா தமிழர்களுக்கு, ரேஷன் கடை இல்லை. பால் பூத் இல்லை என்ற குறை.

● மாநகராட்சியின் கீழ் உள்ள - ஆனால் புறக்கணிக்கப்பட்ட - இன்னொரு பகுதி சிட்கோ நகர், வில்லிவாக்கம். பத்து வருடங்களுக்குமுன் திட்டமிடப்பட்டும் சரியான சாலை வசதி கிடையாது! மழைக் காலத்தில் வெள்ளக்காடுதான். விளக்குக் கம்பங்கள் இருக்கின்றன. வெளிச்சம் என்று வருமோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்! பேருந்து நிலையத்துக்கு இடம் ஒதுக்கியிருக்கிறார்கள். ஆனால் பேருந்து இங்கிருந்து ஓடத் துவங்கவில்லை.

மொத்தத்தில் சென்னை என்றாலே மவுண்ட் ரோடு - எல்.ஐ.சி. கட்டடம், ஆடம்பர ஹோட்டல்கள் என்று மட்டுமே சினிமாக்களில் பார்த்துக் கொண்டிருக்கும் வெளியூர்க்காரர்கள் வடசென்னையை ஒரு ரவுண்ட் அடித்தால் போதும், அப்புறம் ஈரேழு ஜன்மத்துக்கும் சென்னைக்கே வர மாட்டார்கள்.

தொகுப்பு : எஸ். வி. என்.

# வீட்டைக் கட்டிப்பார்!

ரூ. 48,000 எல்.ஐ.ஸி. கடன் வாங்கி, ஒரு நாள் கூட லீவு எடுக்காமல் முழுக்க முழுக்க காண்டிராக்டரை நம்பி வீடு கட்டியதன் பலன், நவம்பரில் வெள்ளம் புகுந்து வீட்டில் தங்க முடியாமல் மொட்டை மாடி சென்று மாடிப்படி landing -ல் தங்கி, சமைத்துச் சாப்பிட்டோம்! இது 78-ல்.

85-ல் ஒரு நண்பர் ரூ 2000/- முன்பணம் தருவதாகவும் மாடியில் ரூம் போட்டுக் கொடுத்தால் பின்னால் வாடகையில் கழித்துக் கொள்ளலாம் என்றும் கூற, ஆசைப்பட்டு இறங்கினேன். பட்ஜெட் 3000த்தில் தொடங்கி, ஒரு ரூம் இரண்டு ரூம்களாகி, பத்தாயிரத்தில் கொண்டு போய் விட்டது. மனைவியின் நகைகள் கைகொடுத்தன. "மாடியில் இருந்து கொண்டு கீழ் போர்ஷனை வாடகைக்கு விடலாம்; அப்போது நகைகளைத் திரும்ப வாங்கிக் கொடுத்து விட முடியும்" என்று எண்ணிய வேளையில் மறுபடி மழை! கீழ் போர்ஷனில் ஊற்று! வீட்டின் பெயர் "கங்கை" ஆயிற்றே!

கீழ் போர்ஷன் தரையை உயர்த்தத் தீர்மானித்து மேலும் கடன்; மேலும் நகை விற்பனை. வீட்டுக்கு அது இது என்று மொத்தமாக 85000 கூடுதல் செலவு. மனைவி உடலில் கவரிங் நகைகள்.

என்றாலும் ரூ 3500 க்கு பிளாட் வாங்கிக் கட்டிய இந்த வீட்டின் மதிப்பு இன்று 9 லட்சம் என்னும் போது பெருமையாக இருக்கிறது. "வீட்டுக்கு பெயிண்ட் அடிக்க வேண்டும்" என்று மனைவியிடம் பேச்சுக் கொடுக்க ஆரம்பிக்கும்போதே அவள் பாக்கியிருக்கும் ஒரிரு தங்க நகைகளைத் தடவிப் பார்த்துக் கொண்டு முறைக்கிறாள். தான் இழந்த நகைகளை மகன் சம்பாதித்து வாங்கித் தருவான் என்று நம்பிக் கொண்டிருக்கிறாள்.

இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் ஆக வேண்டும்; அது வேறு கதை. பின்னால் கல்கிக்கு எழுதுவேனோ என்னவோ!

- பாண்டிச்சேரி, எஸ். வைத்தியநாதன்.



பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சரவன் பெறுமானமுள்ள தங்க நகை பரிசு பெறுபவர்:

எஸ். வைத்தியநாதன்,
"கங்கை", 73, 3வது கிராஸ் தெரு,
வேங்கட நகர்,
பாண்டிச்சேரி - 11.

## கோமாதா காப்பாற்றினாள்!

கிருகப்பிரவேசத்துக்கு ஒரு வாரம் இருக்கும் போது அதிர்ச்சியான செய்தி, நண்பர் வேறு ஒருவர் பிளாட்டில் வீடு கட்டி விட்டார்! பிளாட் சொந்தக்காரர் கிருகப்பிரவேசத்தன்று வீட்டை இடிக்கவே வந்து விட்டார், ஆள் - படையுடன்!

அப்போது பசு மாடு வீட்டுக்குள் அழைத்துப் போகும் சடங்கு நடந்து கொண்டிருப்பதைப் பார்த்து இடிக்க வந்தவர் கும்பிடத் தொடங்கி விட்டார்! அவர் தீவிர கோமாதா பக்தர். காத்திருந்து, விருந்து சாப்பிட்டு விட்டுத் திரும்பினார்! நண்பரின் பிளாட்டை அவர் ஏற்றுக் கொண்டார். எல்லாருக்கும் இப்படி அதிர்ஷ்டம் இராது. வீடு கட்டுமுன் நம் பிளாட்தானா, உறுதி செய்து கொள்ளுங்கள்!

- தேனி, வி. கமலாதேவி.

## லஞ்சம் தராதவர்

## பாரத ரத்னா!

நான் வீடு கட்டிய காலத்தில் லெவி சிமெண்ட் பெர்மிட், கலெக்டர் அலுவலகத்தில் கொடுத்து வந்தார்கள். இன்ஸ்பெக்ஷனுக்கு தாசில்தார் வந்தார். ஏற்கெனவே



பலருக்கு லஞ்சமும் வாங்கிய கடனுக்கு வட்டியும் தந்து வெறுப்புற்றிருந்த நான், தாசில்தாரைக் ''கவனிக்க''வில்லை. அவர் கோபத்தில் ''வீடு முடிந்து விட்டது'' என்று ரிப்போர்ட் கொடுத்து விட்டார். அப்புறம் கலெக்டர் அலுவலகம் சென்று போராட நேர்ந்தது. லஞ்சம் கொடுக்காமல் யாராவது வீடு கட்டியிருந்தால் அவருக்கு ''பாரத ரத்னா'' தரலாம்.

- மேட்டுப்பாளையம், எஸ். ராமசாமி.

## வாரியத்தில் சாவி வாங்கிப் பார்!

''கல்யாணம் பண்ணிப் பார்; வீட்டைக் கட்டிப் பார்'' என்பதை விட ''வாரியத்தில் முன்பணம் கட்டி, சாவியை வாங்கிப் பார்'' என்று வசனம் சொல்ல




லாம். விண்ணப்பிக்கும் போது ஒரு லட்சம் என்றார்கள்; அலாட் ஆகும் போது ஒன்றரை லட்சம் ஆகி விட்டது! விலைதான் உயரும்; கட்டுமானத் தரம் குறையும். படாத பாடுபட்டுப் பணம் கட்டி, அதை விடவும் கஷ்டப்பட்டு, ஈ.ஈ. தரிசனம் கிடைத்து, சாவி கேட்டால் ''இன்னும் வேலை முடியலை, சாவி தர ஒரு மாதம் ஆகும்!'' மூன்று மாதங்கள் ஆகி விட்டன, இன்னும் சாவி வரவில்லை. சாவி கொடுக்காமலேயே நான் கடன் தந்தவர்களிடம் சிக்கி ஆடிக் கொண்டிருக்கிறேன்! குடியிருக்கும் வீட்டுக்குத் தரும் வாடகை வேறு நஷ்டமாகிக் கொண்டிருக்கிறது. வாரியமா ஈடு செய்யும்!

- கவுண்டம்பாளையம்,
ஸி. பி. விஜய்குமார்.

## ஏமாறாதே! ஏமாறாதே!

சொந்த ஊர் புதுக்கோட்டையில் நமக்கென்று ஓர் இடம் இருக்க வேண்டும் என்று மனை வாங்கினேன்.

''அவசரப்பட்டு வாங்கிட்டீங்களே, இந்த மனைகளையும் எதிர்ப்பக்கம் மனைகளையும் அரசு எடுத்துக் கொண்டு விடப் போகிறது!''

''ஐயோ! இப்போ என்ன செய்வது?''

சற்று யோசனை. ''வேறு ஒரு பார்ட்டிக்கு, 'கிடைத்த வரை லாபம்' என்று விற்று விடுங்கள்! நான் ஏற்பாடு பண்ணறேன்.''

'சரி' என்று தலையாட்டி விட்டு, எனக்கு மனை விற்றவரைப் போய்ப் பார்த்துக் கத்த, அவர் சிரித்தார்.

''அந்த ஆளு தம் மாப்பிள்ளைக்காக 12000க்கு அந்த மனையைக் கேட்டார்; நான் 15000க்கு உங்களுக்கு விற்று விடவும் இப்போ உங்களிடமே பத்தாயிரத்துக்குத் தட்டிக் கொள்ளப் பார்க்கிறார்; ஏமாறாதீங்க!''

இப்போது என் மனையில் அழகிய சிறு வீடு. என் வீடு.

- புதுதில்லி, பி. கிருஷ்ணமூர்த்தி.

## வாட்ச்மேன் வில்லன்!

அந்த வாட்ச்மேன் கைதேர்ந்த திருடன்! லீவு சொல்லி ஊருக்குப் போகு முன், சிமெண்ட் மூட்டைகளை விற்றுக் காசாக்கிக் கொண்டு, மணல் மூட்டைகளை அடுக்கி, மேலாக மட்டும் சிமெண்ட் மூட்டைகளை இரண்டு வரிசை அடுக்கி விட்டுப் போய் விட்டான்! இந்த நாளில் வீடு கட்டுவோர், 'வேலியும் பயிரை மேயும்' என்று உணர்ந்து கவனமாக இருக்கணும்.

- பெங்களூர், ஜி. ராமசாமி.



## ஒரே கல்லில் இரண்டு மாங்காய்!

## வட்டமேஜை

### சூப்பர்ப்!

◆ ''ஆணவத் தலைவர்களின் அபத்தப் போக்கு'' தலையங்கம் சூப்பர்ப். தலைவர்களின் ஆணவத்தால் நாட்டில் பிரச்னைகள் தீர்வதற்குப் பதிலாக, புதிதாக முளைப்பதைத் தெள்ளத் தெளிவாக, விருப்பு, வெறுப்பின்றி எழுதியுள்ளீர்கள். கட்சிக் கூட்டத்தில் கூட, நடுவர் மன்றத் தீர்ப்பின் அடிப்படையில் பிரதமர் முன்னிலையில் பேச்சு வார்த்தைக்கு இணங்க, அரசுக்கு எந்தக் கட்சியும் ஆலோசனை வழங்காதது வருத்தமாக இருந்தது. அந்தக் குறையைத் தங்கள் தலையங்கம் தீர்த்து விட்டது. நமது முதல்வர் சிந்திப்பாரா?

ஸ்பிக் நகர், க. கணேசன்.

### கார்ட்டூன் அற்புதம்!

◆ திரைப்பட விழாவுக்குப் பங்காரப்பாவை வில்லன் ஹீரோவாகப் போட்டு, அதற்கு, சமீபத்திய ராஜசேகரின் படமான 'எவனாயிருந்தா எனக்கென்ன...' படப் பெயரைச் சூட்டி கார்ட்டூன் வரைந்திருக்கும் விதம், அற்புதம்!

முத்துப்பேட்டை, தஞ்சைத் தரணியன்.

### பிரார்த்திப்போம்!

◆ அட்டைப் படத்தில் வெளியான இரண்டு குழந்தைகளின் மனநிலை போலவே இரண்டு மாநில மக்களும் இருந்திட பிரார்த்திப்போம். தேசிய ஒருமைப்பாட்டைக் காப்பாற்றுவோம்.

மதுரை - 7, எஸ். திருமலை.

### ஒரே கல்லில்...

◆ காவிரி நீர்ப் பிரச்னை பற்றி ஆயிரம் வார்த்தைகளால் விவரிக்க முடியாத செய்தியை ஓர் அட்டைப் படத்தில் அடக்கிய சாமர்த்தியம்! கவர் ஸ்டோரியைத் தேடினால்... அட.. குழந்தைகள் மனநலன் பற்றிய கட்டுரை. ஒரே கல்லில் இரண்டு மாங்காய் அடித்து விட்டீரே. சபாஷ்!

மதுரை, சி. மகேஷ்.

### வேன் இருந்தால் கொண்டாட்டம்!

◆ குமரி மாவட்டத்தில் நேசமணி போக்குவரத்தின் சீர்கேடு காரணமாக டெம்போ வேன் வைத்திருப்பவர்களுக்குக் கொண்டாட்டம். பெரும்பாலும் எல்லா ஊர்களிலும் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்குப் போக ஒரு ரூபாயிலிருந்து ஒன்றரை ரூபாய் வரை கட்டணமாக வசூல் செய்யப்படுகிறது. இப்படி வேனுக்கு அனுமதி அளித்து வருவாயை இழப்பதை விட பேசாமல் குமரி மாவட்டத்தில் தனியார் பேருந்துகளுக்கு அனுமதி வழங்குவது நல்லது.

குமரி, பைரவி.

### பலருக்குப் 'புதிய காற்று!'

◆ 'புதிய காற்றை'ச் சுவாசித்தது கதையில் வரும் சரவணன் மட்டுமல்ல; தங்களுடைய தவறுகளையும், இயலாமைகளையும் ஒப்புக் கொள்ளாமல், தீவிரமாக உழைக்காமல், வாழ்க்கையை அனுபவிக்கத் தெரியாமல், தன்னம்பிக்கையற்றுச் சோம்பலாய்ச் சுற்றித் திரிந்து, தங்களுடைய தாழ்வுகளுக்கு மூலகாரணம் பெற்றோர்கள் என வாதிடுபவர்களும்தான்!

திருவட்டார், தா. சிந்துகுமார்.

### சரித்திரச் சின்னம்!

◆ சென்னை அடையாறு பழைய பாலம் இன்று பாழாகி நிற்கிறது. டிப்பேயின் சிப்பாய்களும் கிளைவின் சிப்பாய்களும் பொருதிய இடமாகும் அது. புதிய பாலத்துடன் சரித்திரப் பிரசித்தமான அதையும் செப்பனிட்டுப் பாதுகாத்தால் நன்றாக இருக்கும்.

திருநெல்வேலி, கைலாஸ்.

### உண்மையின் வரிவடிவம்

◆ 'புயல் நாணல்' சிறுகதை கற்பனைச் சித்திரம் என்று நம்ப முடியவில்லை. உண்மை நிகழ்வின் வரிவடிவம் போலவே இருந்தது.

காஞ்சிபுரம், கலைமணி.

### ஒரு தகவல்!

◆ ''ஞாபக சக்தியை வளர்த்துக் கொள்வது எப்படி?'' என்ற கட்டுரையைப் படித்தேன். (12.1.92 கல்கி) கட்டுரையின் விஷயம், ஹாரி லொரெய்ன் எழுதிய "How to develop Super Power Memory" என்ற புத்தகத்திலி ருந்து எடுக்கப்பட்டிருக்கிறது.

சென்னை, பி. ரங்கசாமி.

(திரு. நாராயணன், திருமதி கமலியிடம் தொடர்பு கொண்டதில், ஹாரி லொரெய்ன் எழுதிய புத்தகத்திலிருந்து கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்ட உதாரணம் மட்டுமே பெறப்பட்டது என்றும் 'பிறகு தரப்பட்டுள்ள விளக்கங்கள் தங்கள் அனுபவங்களின் அடிப்படையில் வகுக்கப்பட்டவை என்றும் சுட்டிக் காட்டினார்கள். - ஆர்.)

### சென்னை மட்டும் தனியா?

◆ சுகிள் டயரி குலுக்கலில் சென்னையைத் தனிப் பிராந்தியமாகப் பிரித்துக் குலுக்கல் நடத்தப்பட்டது போலும். அதுதான் சென்னையில் பல அதிர்ஷ்டசாலிகளுக்கு டயரிகள் கிடைத்துள்ளன.

பரமக்குடி, என். ஆறுமுகம்.

(கூப்பனில் அடங்கிய எல்லா உறைகளும் சிம்பு - இலக்கியா முன் குவிக்கப்பட்டன. அவ்வப்போது கிளறி, 500 உறைகளை அவர்கள் எடுத்துத் தந்த பிறகு, அந்த உறைகள் பிரிக்கப்பட்டன. இவர்களில் சென்னையில் வாழ்வோருக்குக் கூரியர் மூலம் டயரிகள் அனுப்பப்பட்டதால், சென்னைக் கூப்பன்கள் தனிமைப்படுத்தப் பட்டன. அதனால்தான் பட்டியலின் இறுதியில் சென்னை வாழ்வோர் பெயர்கள் நிறைய இடம் பெற்றுள்ளன. நீங்கள் நினைப்பது போல் சென்னை தனி பிராந்தியமாகக் கருதப்படவில்லை. - ஆர்.)

நாம்தான் சரியாகப் படிக்க முடியலை ம்ம குழந்தைகளாவது நன்றாகப் படிக்கட்டுமே என்று எனது குழந்தைகளை கான்வெண்டில் சேர்த்தேன்.

# ஜஸ்ட் எ மினிட்







# ஈஸி!...

கொஞ்சநாள் வரைக்கும் என் ணவர், குழந்தைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுத்து அவர்கள் ஹோம் ஒர்க் செய்ய மிகவும் உதவியாக இருந்தார். ஆனால் அவருக்கு, ஆபீஸ் வேலை அதிகமாக இருந்ததால் அவரால் குழந்தைகளுக்கு ஹெல்ப் பண்ண முடியவில்லை.

குழந்தைகள் ஹோம் ஒர்க் செய்ய எனது உதவியை நாடும் போது எனக்கு மிகவும் வேதனையாக இருக்கும். அதுவும் இங்கிலீஷ்கிராமர் சம்மந்தமாக அவர்கள் கேட்கும் சந்தேகங்களுக்கு பதில் சொல்ல முடியாமல் திண்டாடினேன்.

எனக்கு இங்கிலீஷ் தெரியாது என்பதை குழந்தைகளிடம் சொல்லிக் கொள்ளவும் முடியவில்லை.

வாரப் பத்திரிக்கை ஒன்றைப் புரட்டும் போது "வீட்டிலிருந்தபடியே இங்கிலீஷ் கற்றுக் கொள்ளலாம்" என்ற விவேகானந்தா கல்வி நிலையத்தின் விளம்பரம் கண்ணில் பட்டது.

ட்ரை பண்ணிப் பார்க்கலாமே என்று, அவரது சம்மதத்துடன் விவேகானந்தா கல்வி நிலையத்தில் சேர்ந்தேன்.

முதல் மூன்று மாதங்களில் வாக்கியங்களை அமைக்கப் பழகி, ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டேன்.

அடுத்த மூன்று மாதங்களில் அவர்கள் சொல்லியிருந்தபடி பயிற்சிகளைச் செய்து பழகி "ஸ்போக்கன் இங்கிலீஷைக்" கற்றுக்கொண்டேன்.

இப்பொழுது குழந்தைகளுக்கு, என்னால் இங்கிலீஷ் கிராமரை அவர்களுக்குப் புரியும் வகையில் சொல்லிக் கொடுக்க முடிகிறது.

குழந்தைகளோட சேர்ந்து நானும் இங்கிலீஷில சரளமாகப் பேசும் போது எனக்கே ரொம்ப பெருமையா இருக்கு!

– Mrs. ஜானகி சுந்தர்

நீங்களும் வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில், தபால் மூலம் ஆங்கிலம் கற்றுக்கொள்ளலாம்.

**"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**

கீழ்க்கண்ட முகவரியில் இன்றே தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

**விவேகானந்தா கல்வி நிலையம்**
9, நடேசன் தெரு, தி.நகர்,
சென்னை 600 017.

NAGA

## நீங்கள் கேட்டவை - தராசு

● எஸ். மங்களம், கும்பகோணம்.

? பொங்கலன்று டி.வி.யில் ஒளிபரப்பான நிகழ்ச்சிகளில் உங்களை மிகவும் கவர்ந்தது?

! அலட்டிக் கொள்ளாத பாக்யராஜின் இயல்பான நிகழ்ச்சி.

● ப. உத்தண்டராமன், நெய்வேலி.

? சிட்னி கிரிக்கெட் டெஸ்ட்டில் ஸ்ரீகாந்த் ஆட்டம் எப்படி?

! இல்லையா? ஸ்ரீகாந்துக்குப் பதில்தான் சித்து வந்து முட்டை போட்டாரே, தெரியாதா? அதிருக்கட்டும், அவனவன் ''டெண்டுல்கர் டெண்டுல்கர்'' என்று ஜபம் பண்ணிக்கிட்டிருக்கான், ஸ்ரீகாந்தாமே, ஸ்ரீகாந்த்!

● முஸ்தபா கமால், தக்கோலம்.

? பெண் பார்க்கும் போது பாடச் சொல்வது ஏன் குறைந்து விட்டது?

! ''அப்புறம் அவதான் பாடப் போறா, இவன்தான் ஆடப் போறான், தெரிந்த கதை தானே'' என்பதால் இருக்கலாம்!

● எஸ். பி. ஜவஹர்லால் நேரு, புழல்.

? எங்கள் புரட்சித் தலைவி பொங்கலை முன்னிட்டு ஏழை எளியோருக்கு வேட்டி சேலை கொடுத்திருக்கிறாரே, புரட்சிதானே?

! சொந்தத்தில் வேட்டி சேலை வாங்கக் கூடிய பொருளாதார மேம்பாட்டினை மக்களிடையே உண்டாக்குவதோடு, இலவசங்களை ஏற்பதில்லை என்ற மனப்பக்குவத்தையும் அவர்களிடம் வளர்த்து விட்டால் மெய்யாலுமே மாபெரும் புரட்சிதான். இது அல்ல.



➤ புரட்சிதானே?

# முதல்வரின் இருநூறு நாள் சாதனை என்ன?

● கபில வேங்கடேசன், சென்னை

? ''எனக்கு இன்னும் பணம் வரவில்லை; சாப்பாட்டுக்குப் பணம் போதாது'' என்ற தொண்டர்களின் வழக்கமான கூப்பாடுகள் அற்ற கம்யூனிஸ்ட் மாநாடு எப்படி?



➤ ஸ்ரீகாந்தாமே, ஸ்ரீகாந்த்!

! அந்த விதத்தில் ஏ. ஒன்தான். அது மட்டுமல்ல, சுற்றிலும் சினிமா ஷூட்டிங் நடக்கிற ஸ்டுடியோக்கள் இருந்தும் ஒரு தடவை கூட எட்டிப் பார்க்காத இந்தக் கம்யூனிஸ்ட்கள் ஓர் ஆச்சர்யம்தான். அவர்களின் கொள்கைகள் நமக்கு உடன்பாடாக இல்லாமல் போகலாம்; ஆனால் அந்தக் கட்டுப்பாடும் செயல் வீரமும் வணக்கத்துக் குரியன.

● லீலாராம், தக்கலை.

? சென்னையில் திருடனை விரட்டிப் பிடித்த வீரப் பெண்மணியின் சாகஸம் பற்றி?

! முறத்திலிருந்து ஒருவழியாக அரிவாள் மணைக்கு வந்திருக்கிறார்கள். 2001ல் பிஸ்டல்?

● கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.

? விலைவாசி உயர்வு விண்ணைத் தொட்டு விடும் போலிருக்கே?

! விண்ணுக்கு எல்லை கிடையாது; அதனால் எதையும் தொட்டு விட முடியாது! பட்ஜெட் வரட்டும். இதை உணர்வீர்கள்!

● மல்லிகை மன்னன், மதுரை.

? ''ஜெயலலிதாவின் அரசு, எதிரிகளைத்

தீர்த்துக் கட்ட அரிவாளைத் தீட்டும் அரசாக இருக்கிறதே தவிர, திட்டங்களைத் தீட்டுகிற அரசாக இல்லை'' என்கிறாரே கலைஞர்.

! ஜெயலலிதாவை எதிர்க்கக் கருணாநிதி மூளையைத் தீட்டிக் கொண்டிருக்கிறார்; அதனால் அப்படி பேசுகிறார். பதவிக்கு வந்த பிறகு எதிரிகளைப் பழிவாங்குவது என்பது கலைஞர் ஆட்சியிலும் இருந்ததுண்டு. திட்டம் தீட்டுவது என்பது பதவிக்கு வரும் யாருக்கும் எளிது; நிறைவேற்றுவதுதான் கஷ்டம். ஜெ ஆட்சியிலும் கலைஞர் ஆட்சி போலவே திட்டங்களுக்குப் பஞ்சமில்லை.

● வ. தே. பா. சென்னை - 29.

? ''பந்த் நடத்தியிருக்க வேண்டியதில்லை; ஆனாலும் அமைதியாக நடத்திய ஜெயலலிதாவின் திறமையைப் பாராட்டுகிறேன்'' என்று சந்திரசேகர் அறிவித்துள்ளாரே?

! ஆமாம், அடுத்த முறை அவர் ஒழுங்காகத் தமிழகம் வந்து போக வேண்டாமா? சிதம்பரம் விவகாரமெல்லாம் இன்னும் மறந்திருக்க முடியாதே!

● மா. பழனிசாமி, கோவை.

? ''ரேஷன் கடைகளில் நிரோத் விற்கலாம்'' என்று பிரதமரே கூறியிருக்கிறாரே, நல்ல பயன் அளிக்குமா?

! ''நோ ஸ்டாக்'' போர்டு தொங்காமல் இருந்தால் சரி!

● கே. எம். தியாகு, கரடிப்பட்டி.

? திருவள்ளுவர் விருது நெடுஞ்செழியனுக்கு அளிக்கப்படுவதின் நோக்கம் என்னவாக இருக்கும்?

! பல்கலைக் கழகங்கள் அளிக்கும் டாக்டர் பட்டங்களுக்கும் அரசு வழங்கும் விருதுகளுக்கும் ஒரு காலத்தில் மதிப்பும் மரியாதையும் இருந்தது. இன்று அவை கேலிக்குரியனவாகி விட்டன. கொடுக்காமல் இருந்தாலே தேவலாம்!

● எம். ஜாபர் ஸலாம், திட்டச்சேரி.

? சொற்பொழிவுகளால் என்ன பயன்?

! சுதந்திரத்துக்கு முற்பட்ட காலத்தில் சரித்திரம் படைக்க உதவின சொற்பொழிவுகள். இன்று வேர்க்கடலை, பட்டாணி சுண்டல் கொறித்தலுடன் கூடிய மலிவான பொழுதுபோக்கு.

● ஆர். கருணாகரன், மேட்டூர் அணை.

? முதல்வரின் இருநூறு நாட்களின் சாதனை என்ன?

! தமிழ்நாட்டின் திட்ட முதலீட்டுக்கு, மத்திய அரசின் நிதி ஒதுக்கீடு, சென்ற ஆண்டை விட நூறு கோடிக்கு மேல் குறைச்சல்; கர்நாடகாவுக்குச் சென்ற நிதி ஆண்டை விட 405 கோடி அதிகம்! இதை விடப் பெரிய சாதனையாக எதைக் கூற?



நீட்டுகிறார்!



வந்த போதெல்லாமே



திருவள்ளுவர் விருது

● இ. சுரேஷ் பாபு, பட்டுக்கோட்டை.

? மனத்தைப் பாதித்த சமீபத்திய நிகழ்ச்சி?

! அரசு ஆதரவுடன் தமிழகமெங்கும் மருத்துவ முகாம்கள் நடக்கும் என்பதாக முதல்வர் அறிவித்திருப்பதுதான். மருத்துவ முகாம்களை பரோபகார மனப்பான்மையுடன் சேவா சங்கங்களும் அவர்களுக்கு உதவ முன்வரும் தன்னலம் கருதாத டாக்டர்களும்தான் நடத்த வேண்டும். அப்போதுதான் சரியாக நடக்கும். தவறு நேர்ந்தால் அரசு தட்டிக் கேட்கவும் முடியும். நடத்துகிறவர்களுக்கு பயத்துடன் கூடிய கவனிப்பு உணர்வு இருக்கும். அரசே மருத்துவ முகாம்கள் நடத்துவது எனில் கோடி கோடியாகச் செலவழித்து மருத்துவமனைகளும் ஆரம்ப சுகாதார நிலையங்களும் கட்டி, ஆயிரம் ஆயிரமாகச் சம்பளம் கொடுத்து டாக்டர்களையும் நர்ஸ்களையும் நியமிப்பானேன்? அரசு நடத்தும் மருத்துவ முகாம்கள் ஆபத்தாக முடியும் வாய்ப்புக்களே அதிகம். தட்டிக் கேட்க யாரும் இல்லாததால், கவனக்குறைவே மிகுதியாக இருக்கும். திட்டத்தில் மறுபரிசீலனை தேவை.

□ ரூ 25 பரிசு பெறுபவர் :
கபில வேங்கடேசன்,
10, ராமகிருஷ்ணாபுரம் 2வது தெரு,
ஆதம்பாக்கம்,
சென்னை - 88.

## திரும்பிப் பார்க்கிறேன் - 18

ஹிந்தி 'நெஞ்சில் ஓர் ஆலயத்'தில் ராஜேந்திர குமார் நடிக்கிறார் என்பது தீர்மானமாகி விட்டது. ஹீரோயின் யார்?

இரண்டாவது கருத்துக்கு இடமின்றி என் மனத்தில் பளிச்சிட்ட முகம் மீனா குமாரியுடையது.

என் எண்ணத்தை அறிந்து கொண்டதும் ராஜேந்திர குமார் ரொம்ப சந்தோஷப்பட்டு, ''மிக அருமையான தேர்வு; உங்களுக்கு மீனாவைத் தெரியுமா? பழக்கம் உண்டா?'' என்று கேட்டார்.

''இல்லை'' என்றேன்.

''கவலையை விடுங்கள்; நான் அறிமுகம் செய்து வைக்கிறேன்'' என்றார்.

அதே போல் நான் அடுத்த தடவை பம்பாய் சென்ற போது மீனா குமாரியையும் அவர் கணவரையும் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். கதையைக் கேட்ட மீனாகுமாரி, அதில் ஈடுபாடு கொண்டவராக உடனே நடிக்கச் சம்மதம் தெரிவித்தார்.

நோயாளி வேடத்தில் யாரைப் போடுவது? ஒருநாள் நானும் ராஜேந்திர குமாரும் ஓஷியானிக் ஹோட்டலில் டீ சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். அப்போது ஒருவர் கையில் டீ கோப்பையுடன் இங்கும் அங்கும் நடந்து போய், நண்பர்களைச் சந்திப்பதும் குசலம் விசாரிப்பதுமாய் இருந்தார். ''அவர் யார் தெரிகிறதா?'' என்று கேட்டார் ராஜேந்திரகுமார்.

''பார்த்தால் நடிகர் ராஜ்குமார் போல இருக்கிறது'' என்றேன்.

''ராஜ்குமாரேதான்!'' என்றார் ராஜேந்திரகுமார்.

''மதர் இந்தியா படத்தில் நர்கீஸின் கணவராக நடித்த அவருடைய ஆற்றலை நான் வெகுவாக ரசித்தவன்'' என்றேன். ''அவர் நடிப்பில் நல்ல முதிர்ச்சி இருக்கிறது.''

''உங்கள் படத்தில் இவரை நோயாளியாக நடிக்கச் செய்தால் என்ன?''

''நல்ல சாய்ஸ்தான்'' என்று நான் ஒப்புக் கொண்டு தலையாட்டினேன். அப்போதே எங்கள் சந்திப்புக்கு ராஜேந்திர குமார் ஏற்பாடு செய்து விட்டார்.

விஷயத்தைத் தெரிந்து கொண்ட ராஜ்குமார், ''நான் முதலில் தமிழ்ப் படத்தைப் பார்க்க விரும்புகிறேன்'' என்றார். அவர் கோரிக்கை எனக்கு ரொம்ப நியாயமானதாகப் பட்டதுடன், அதனாலேயே சந்தோஷத்தையும் அளித்தது. மறுநாளே படத்தை ராஜ்குமார் பார்ப்பதற்காகப் பிரத்தியேகக் காட்சி ஏற்பாடு செய்தேன்.

படம் முடிந்ததும் ராஜ்குமார் என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டு விட்டார். ''இந்தப் படத்தில் நடிப்பதை எனக்கு அளிக்கப்படும் கௌரவமாகவே கருதுகிறேன். உங்களுக்கு எப்படி நன்றி சொல்வது என்றே தெரியவில்லை!'' என்றார்.

அடுத்து இசையமைப்பாளராக யாரைப் போடுவது என்பது கேள்வி. என் நண்பர் என்ற முறையில் ராஜேந்திரகுமார் உரிமையோடு சங்கர் - ஜெய்கிஷனைச் சிபாரிசு செய்தார்.

''அவர்கள் திறமையை நான் அறிந்திருக்கிறேன்; அவர்கள் எவ்வளவு பாபுலர் என்பதும் தெரியும்; ஆனால் அவர்களைப் போடுவதில் ஒரு சிக்கல் இருக்கிறது. அவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்'' என்றேன்.

''ஏன்? ஏன்?'' என்று வியப்பும் திகைப்புமாகக் கேட்டார் ராஜேந்திரகுமார். நான் விளக்கினேன் :

''ராஜ்கபூர் படங்கள் என்றாலே மியூஸிக் சங்கர் - ஜெய்கிஷன் என்பது பிரபலமாகி விட்ட விஷயம். அதனால் ராஜ்கபூரை வைத்து நான் ''நஸ்ரானா''★ எடுத்த போது, அவர்களைத்தான் ஒப்பந்தம் செய்தேன். இதில் ராஜ்கபூரின் சிபாரிசும் உள்ளடங்கி இருந்தது. ஆனால் பிறகு ஏற்பட்ட ஒரு கருத்து மாறுபாடு காரணமாக சங்கர் - ஜெய்கிஷனை நீக்க வேண்டியதாகி விட்டது.''

★ ஹிந்தி கல்யாணப் பரிசு

# சங்கர்–ஜெய்கிஷன்: சண்டையும் சமாதானமும்

''என்ன கருத்து மாறுபாடு?'' என்று பரபரப்புடன் வினவினார் ராஜேந்திர குமார்.

''நஸ்ரானா படம் சம்பந்தப்பட்ட பணிகள் ஆரம்பமான சில நாட்களில், பாடல்கள் இடம்பெறும் கட்டங்களை சங்கர் - ஜெய்கிஷனுக்கு விவரமாக எடுத்துரைக்க நண்பர் ஒருவரை அனுப்பி வைத்தேன். அந்தக் கட்டங்களுக்கு ஏற்ப மியூஸிக் போட்டுத் தரும்படி கோரிக்கை அனுப்பியிருந்தேன். அதற்கு அவர்கள் சொல்லி அனுப்பிய பதில் என் கோபத்தைக் கிளறியது...''

''அப்படி கோபப்படும்படி என்ன சொன்னார்கள்?''

''தமிழ்ப் படத்தில் பாடல்கள் இடம் பெற்ற கட்டங்கள் என்பதற்காக அதே சிகுவேஷனுக்கு அவர்களும் மியூஸிக் அமைக்க வேண்டும் என்று நான் எதிர்பார்க்கக் கூடாது என்றும், படத்தைப் பார்த்து விட்டுப் பாடல்கள் இடம்பெற வேண்டிய கட்டங்களை அவர்களே தேர்ந்தெடுப்பார்கள் என்றும் சொல்லி அனுப்பினார்கள்.

''இதை என்னால் ஏற்க முடியவில்லை. ''கல்யாணப் பரிசு'' தமிழ், தெலுங்கு இரண்டிலும் சூப்பர் ஹிட் ஆன படம். இன்று ஹிந்தியில் விரும்பி நடிப்பவரோ ஹிந்தி சினிமா உலகின் முடிசூடா மன்னர் ராஜ்கபூர். இவ்வாறிருக்க, இசையமைப்பாளர்கள் எனக்குக் கண்டிஷன் போடுவதா? அது நியாயம் அல்ல என்பதுடன், எனக்குத் தன்மானப் பிரச்னை.

''நான் கூறும் பாடல் காட்சிகளுக்கு அவர்கள் இசையமைப்பதானால் சரி; இல்லையென்றால் அவர்கள் என் படத்துக்கு இசையமைக்கவே வேண்டாம்'' என்று நான் கண்டிப்பாகக் கூறி விட்டேன். அவர்களும் தங்கள் நிலையில் பிடிவாதமாக இருக்கவே, கடைசியில் ஒப்பந்தமானவர் ரவி. பாட்டுக்கள் ஒவ்வொன்றும் ஹிட்.''

**ந**டந்ததையெல்லாம் கேட்டுக் கொண்ட ராஜேந்திரகுமார், ''இப்போது நெஞ்சில் ஓர் ஆலயத்துக்கு அவர்களை அணுக நீங்கள் தயங்குவது நியாயம்தான். எனக்குப் புரிகிறது. ஆனாலும் கேட்கிறேன், அவர்கள் சம்மதம் அளித்தால் நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா? அவர்கள் என் நெருங்கிய நண்பர்கள். அவர்களைச் சம்மதிக்க வைப்பது என் பொறுப்பு'' என்றார்.

''அவர்கள் ஆற்றலை நான் நன்கு



மீனா குமாரி

உணர்ந்தவன். அதனால் எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் ஒன்று, நான் தேர்ந்தெடுக்கும் சிகுவேஷன்களில்தான் பாடல்கள் இடம்பெறும்'' என்றேன் உறுதியாக.

அடுத்த முறை நான் பம்பாய் சென்ற போது, ராஜேந்திரகுமார் எனக்கும் ஜெய்கிஷனுக்கும் இடையே ஒரு சந்திப்பை ஏற்படுத்தினார். பழைய சம்பவத்தை ஜெய்கிஷன் மறந்துவிடத் தயாரானது மட்டுமல்ல, அதற்காக வருந்தவும் செய்தார். ''நஸ்ரானாவில் பணியாற்ற முடியாமல் போனது எங்கள் துரதிர்ஷ்டம்தான். இப்போது இந்தப் படத்துக்கு உங்களுக்கு எங்கெங்கே, எப்படிப்பட்ட பாடல் காட்சிகள் அமைய வேண்டும், சொல்லுங்கள். அதற்கேற்ப இசை அமைத்துத் தருகிறோம்'' என்றார்.

அந்தக் கணத்தில் ஜெய்கிஷன் என் நெருங்கிய நண்பரானார். கலகலப்பாகப் பேசிய அந்தத் தங்கமான மனிதர், காலனால் கவரப்படும் வரை என் இனிய நண்பராகவே திகழ்ந்தார்.

ஆயினும் கூட, இதே ''நெஞ்சில் ஓர் ஆலயம்'' ஹிந்தி படப்பிடிப்பின்போதே ஜெய்கிஷனுடன் மறுபடியும் மோத வேண்டிய நிர்ப்பந்தமும், நாற்பத்தெட்டு மணி நேரம் கெடு வைக்க வேண்டிய கட்டாயமும் எனக்கு ஏற்பட்டது!

அது என்ன நாற்பத்தெட்டு மணி நேரக் கெடு? அதைத் தெரிந்து கொள்ள 168 மணி நேரம் நீங்கள் காத்திருக்க வேண்டியதுதான்! பிளீஸ் வெய்ட்!

டைரக்டர் ஸ்ரீதர்

**ப**ல்லவனிலிருந்து இறங்கியவருக்குச் சுமார் எழுபது வயதிருக்கலாம். மெலிந்த உருவம். கயிற்றால் காதில் மாட்டப்பட்ட மூக்குக் கண்ணாடி. கதர்ச் சட்டை - வேட்டி. அந்தப் பதினான்கு மாடிக் கட்டடத்தை நோக்கி மெதுவாக நடந்தார்.

**வே**லை கிடைக்காதோர் சங்கத்தின் கூட்டம் உழைப்பாளர் சிலையின் நிழலில் கூடியது. அவர்கள் மத்தியில் சங்கத்தின் தலைவன் ராஜா எழுந்து பேசத் தொடங்கினான், 'மைக்' இல்லாமலே அவன் குரல் கணீரென்று கேட்டது.

''நண்பர்களே! வெற்றிகரமாக எழுபத்தைந்தாவது நேர்முகத் தேர்வைச் சந்தித்துத் தோல்வியைத் தழுவி வந்திருக்கும் நமது பேரன்பிற்கும், பரிதாபத்திற்கும் பாத்திரமான மணிக்கு அனுதாபம் தெரிவிப்பதுடன் இந்தக் கூட்டத்தைத் துவக்குகிறேன். நாட்டில் நமக்கு மட்டும்தான் வேலை இல்லையா அல்லது யாருக்குமே இல்லையா என்ற கேள்வி என் அடிமனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. அதற்கு விடை, மணி சென்று வந்த நேர்முகத் தேர்வின் மூலம் கிடைத்தது. நம்மைப் போன்ற நேர்மையாளர்களுக்குத்தான் நாட்டில் வேலை இல்லை. லஞ்சம் கொடுப்பவருக்கும், சிபாரிசு உள்ளவருக்கும் நிச்சயம் வேலை உண்டு!''

''வேஷம்! வேஷம்!'' என்று கூட்டத்திலிருந்து கூக்குரல் எழுந்தது.

**''அ**வுட் ஆப் ஆர்டர்'' போர்டுடன் இளித்த லிப்டை ஆதங்கத்தோடு பார்த்தவர் மெதுவாகப் படிகளில் ஏறத் தொடங்கினார். முதல் மாடியைக் கடப்பதற்குள் அவருக்கு மூச்சு வாங்கியது. ஆசுவாசப்படுத்திக் கொண்டு இரண்டாவது மாடியை அடைந்த போது ரொம்பவும் தளர்ந்து போயிருந்தார்.

''வரதன் இண்டஸ்ட்ரீஸ்'' கண்ணாடிக் கதவை தள்ளிக் கொண்டு உள்ளே போன வரை ஏ.சி. காற்று தாக்கியது. சிலிர்த்துக் கொண்டு கம்பள விரிப்பில் அடிமேல் அடி வைத்து ரிஸப்ஷனிஸ்ட் மேஜையை எட்டினார்.

''......எம். டி. வரதனைப் பார்க்கணும்....''

''யுவர் நேம்?''

''சிதம்பரம்னு சொல்லும்மா......''

**ந**ண்பர்களே! இனி பொறுமையாக இருப்பதில் பயனில்லை. அடங்கிப் போனால் நம்மை ஏமாளி ஆக்கிவிடுவார்கள். போர்க் கொடி உயர்த்துவோம். நம்மை வேலைக்கு அமர்த்தாதவர்கள் அலுவலகம் முன் மறியல் செய்வோம். அவர்கள் கொட்டத்தை அடக்குவோம். சிபாரிசு, லஞ்சம் இத்யாதிகள்தான் வேலை கிடைக்க அடிப்படைத் தேவை என்ற காலம் மாறி, திறமைக்கு வேலை என்ற காலம் வரும் வரை போராடுவோம்! இதனால் நமக்குப் பலன் கிடைக்காவிட்டாலும் நம்மைப் போன்ற மற்றவர்களுக்காவது இது நன்மை பயக்கட்டும். இளம்புங்கள், வீர நடை போட்டு மறியல் போராட்டத்தை நடத்துவோம்!''

அனைவரும் அடிபட்ட சிங்கங்களைப் போல் கர்ஜித்துக் கொண்டு எழுந்தனர்.

**சி**வசிதம்பரத்தைப் போலவே வரதனும் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டவர்தான். பாதை தான் வேறு.

சுதந்திரம் கிடைத்த பிறகு வரதன் பெரிய தொழிற்சாலை உருவாக்குவதில் முனைந்து வெற்றியும் கண்டார். இன்று நாடே போற்றும் பெரிய தொழிலதிபர்.

தம் அறையை விட்டு வெளியே வந்து சிவசிதம்பரத்தை ஆரத் தழுவி வரவேற்றார் வரதன்.

''என்னப்பா, எப்படி இருக்கே? பார்த்து எவ்வளவு வருஷங்களாச்சு?''

பழைய நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்து, பொது விஷயங்களை அலசி இறுதியாகச் சிவசிதம்பரம் விஷயத்துக்கு வந்தார்.

''வரதா! உதவி கேட்டு நம்ம நட்பைக் கொச்சை படுத்தக் கூடாதுன்னுதான் பார்த்தேன். ஆனா.....''

''என்ன தயக்கம் சிவா? தைரியமாச் சொல்லு!''

''வந்து... உன் கம்பெனியில வேலைக்கு ஆள் எடுக்கறதா விளம்பரம் பார்த்தேன். வேலை கிடைக்காம இருக்கிற பையனுக்கு.....''

''இதுக்காகத்தான் இவ்வளவு கஷ்டப்பட்டியா? நீ சொல்லி நான் இல்லைன்னு சொல்றதா? கவலைப்படாதே, உன் பையனுக்கு நிச்சயம் வேலை கொடுக்கறேன்!''

இண்டர்காமை உசுப்பி, பர்ஸோனல் மானேஜரை அழைத்தார். சில வினாடிகளில் ஒரு துடிப்பான இளைஞன் உள்ளே வந்தான்.

# பையனுக்கு

நாணு

''ரமேஷ்! இன்னைக்குத் தானே கிளரிகல் போஸ்ட் இன்டெர்வியூ?''

''எஸ்ஸார். காலைலயே முடிஞ்சு போச்சு.''

''இவர் பெரிய தியாகி. என் நெருங்கிய நண்பர். இவர் பையனை ஒரு வேகன்ஸில போட்டுருங்க!''

ரமேஷ் சற்று தயங்கினான்.

பக்கத்து அறையிலிருந்து துரித கதியில் ஒரு பெண் வந்தாள்.

''ஸார், ஒரு கான்பிடென்ஷியல் மெஸேஜ் வந்திருக்கு. கொஞ்சம் வரீங்களா?''

சிவசிதம்பரத்தைக் கொஞ்சம் காத்திருக்கச் சொல்லி விட்டு அந்தப் பெண்ணைத் தொடர்ந்தார் வரதன். கூடவே ரமேஷும் ஓடினான்.

''வாட் ப்ராப்ளம் ரமேஷ்?''

''ஸார், இருக்கிறது மூனு வேகன்ஸி. ஒண்ணு



# வேலை

மினிஸ்டர் சிபாரிசு. தட்ட முடியாது. ரெண்டாவது நம்ம முக்கிய கிளைன்ட் வேலாயுதம் அனுப்பின ஆளு. வேலை கொடுக்கலைன்னா மனக்கசப்பு வந்து பிரச்னைகள் உருவாகலாம். ஏற்கெனவே வேலாயுதத்தை நம்ம காம்படீடர் முகர்ஜி இழுக்க முயற்சி பண்றதாக் கேள்வி. மூணாவது ரிஸப்ஷனிஸ்ட். ஹி...... ஏற்கெனவே ஒரு லேடியை.....''

''ஐ ஸீ.... இதுல இவ்வளவு சிக்கல் இருக்கும்னு எதிர்பார்க்கலை!''

''எனக்கும் வந்திருக்கிறவரைப் பார்த்தாப் பாவமாகத்தான் இருக்கு. சொல்லப் போனா அவர் நிலமை ரொம்ப மோசம். தியாகிகள் பென்ஷன்லயும், இவர் எடுக்கிற டியூஷன்லயும்தான் குடும்பம் ஓடிட்டிருக்கு!''

''இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''நான் இருக்கிற தெருவிலேதான் இவர் குடிசையும் இருக்கு.''

''இப்ப எப்படி சிவா கிட்டே நேரிடையா வேலை இல்லைன்னு சொல்றது?''

வரதன் குழம்பிப் போனார்.

''அடிக்காதே! அடிக்காதே!''

''எங்கள் வயிற்றில் அடிக்காதே!''

''நடத்தாதே! நடத்தாதே!''

''இன்டெர்வியூ நாடகம் நடத்தாதே!''

''கொடு! கொடு! வேலை கொடு!''

''திறமைசாலிக்கு வேலை கொடு!''

''தோழர்களே! மணியின் கனவுக் கோட்டையைத் தகர்த்தெறிந்த எழுபத்தைந்தாவது அலுவலகம் இதுதான். இங்கிருந்தே நமது மறியல் போராட்டத்தைத் துவக்குவோம்!''

''போராடுவோம்!''

''வெற்றி பெறுவோம்!'' என்று கோஷமிட்டுக் கொண்டிருந்தபோது, சம்பந்தமில்லாத சில விஷமிகள் கூட்டத்தில் கலந்தனர். அந்த கட்டடத்தின் கண்ணாடிக் கதவுகளைக் கற்களால் பதம் பார்த்தனர்.

''அமைதி! அமைதி!'' என்று கத்திய ராஜாவின் குரலை அவர்கள் அலட்சியம் செய்தனர்.



## பாழடைந்த பள்ளிக்கூடம்

**இது** ஏதோ இராக்-குவெய்த் யுத்தத்தின் போது குண்டு விழுந்த கட்டடம் அல்ல.

திருவொற்றியூர் நெடுஞ்சாலையில் உள்ள மாநகராட்சி உயர்நிலைப் பள்ளிக் கட்டடம்தான் இது! நம்புங்கள் - மாணவர்களும், மாணவிகளுமாகக் கிட்டத்தட்ட 1200 பேர் படிக்கும் பள்ளிக்கூடம்.

கூச்சல் கேட்டு வெளியே எட்டிப் பார்த்த ரமேஷின் முகத்தில் சந்தோஷ அலை படர்ந்தது.

''ஸார்! வழி இடைச்சாச்சு! வேலை இல்லைன்னு சொல்ல வழி இடைச்சாச்சு!''

''என்ன சொல்றீங்க?''

''கீழே ஒரு கும்பல், பயங்கர கலாட்டாவுல ஈடுபட்டிருக்கு. அதுக்குத் தலைவனா உங்க நண்பருடைய மகன்!''

வரதன் சந்தோஷமாகச் சொன்னார். ''சிவா! உன் பையனுக்கு அபாயின்மெண்ட் ஆர்ட்ர் டைப் பண்ணச் சொல்லிடறேன். உடனே வந்து என்னைப் பார்க்கச் சொல்லு!''

''ரொம்ப நன்றி வரதா. நான் எப்படி.....''

பேசமுடியாமல் சிதம்பரத்தின் குரல் கம்மியது.

ரமேஷ் பதற்றமாக உள்ளே வந்தான்.

''ஸார், வெளில ஒரே கலாட்டா. குண்டர்கள் கூட்டம் கண்ணாடிகளை உடைச்சு ஆர்பாட்டம் பண்றது!''

அப்போதுதான் அதைக் கேள்விப்பட்டவர் போல் வரதன் கலவரப்பட்டார்.

''அப்படியா? அவங்களுக்கு என்ன வேணும்னு கேளுங்க... இல்லை அவங்க லீடரை இங்கே கூட்டிட்டு வாங்க!''

உடனே வெளியேறினான் ரமேஷ்.

''இந்தக் காலத்துல எதுக்குத்தான் ஆர்பாட்டம் பண்றதுன்னே இல்லை. தேசத்தைக் காக்க நாம அன்னிக்குப் பண்ணின ஆர்ப்பாட்டங்களுக்கெல்லாம் மதிப்பே இல்லாமப் போச்சு!''

அலுத்துக் கொண்ட வரதன், ''போகட்டும் சிவா, நாளைக்கே உன் பையனை வரச் சொல்லு. ஆர்டரைக் கொடுத்துடறேன்!'' என்றார்.

கதவைத் திறந்து கொண்டு ரமேஷ் வந்தான்.

''ஸார்! அந்த லீடரை கூட்டி வந்திருக்கேன்!''

''வரச்சொல்லுங்க!''

ரமேஷ் குரல் கொடுக்க ராஜா உள்ளே வந்தான். அவனைப் பார்த்து சிவசிதம்பரம் திடுக்கிட்டார். ராஜாவுக்கும் சற்றே அதிர்ச்சி.

வரதன் தான் அங்கு நிலவியிருந்த மௌனத்தைக் கலைத்தார்.

''என்ன சிவா, என்னாச்சு?''

''வந்து... இவன் யாருமில்லை. என் மகன்!''

''வாட்? உண்மையாகவா?''

வேதனையோடு தலையசைத்தார் சிவசிதம்பரம்.

வரதன் கவலையாக முகத்தை வைத்துக் கொண்டு சொன்னார்.

''என்னை மன்னிச்சுடு சிவா. நீ சொன்னதுனால ஏற்கெனவே செலக்ட் பண்ணியிருந்த ஒரு கேண்டிடேட்டை நிராகரிச்சு, உன் மகனுக்கு வேலை தர முடிவு பண்ணினேன். ஆனால் இதுபோல ஆர்ப்பாட்டக்காரன்தான் உன் மகன்னு இப்பத் தெரிஞ்சு போச்சு. இவனை வேலைக்குச் சேர்த்தா நாளைக்கு எதுக்கெடுத்தாலும் கொடி பிடிப்பான். கோஷம் போடுவான். இதுபோல பிரச்னைகள் எதுவுமில்லாம அமைதியான சூழ்நிலைல என் கம்பெனி நடந்திட்டிருக்கு. அதைக் கெடுத்துக்கச் சொல்லாதே!''

பேசி முடித்த வரதனை ஆச்சர்யத்தோடு பார்த்தார் சிவசிதம்பரம்.

''உனக்கு அப்படியொரு சங்கடத்தை என்னிக்குமே நான் தரமாட்டேன் வரதா!''

''என்ன சொல்றே?''

''இவன் என் மகன்னுதான் சொன்னேன். இவனுக்குத்தான் வேலை கேட்டேன்னு சொன்னேனா? இவனுடைய வன்முறைப் போக்கு எனக்குப் பிடிக்காம இவனை நான் என்னிக்கோ தலை முழுகியாச்சு?''

''அப்ப வேலை.....''

திகிலோடு கேட்டார் வரதன்.

''எங்கிட்டே டியூஷன் படிச்ச ஒரு பையனுக்குத்தான். நல்ல பையன். திறமைசாலி. நீ சொன்ன மாதிரி நாளைக்கு அவனை இங்கே அனுப்பி வைக்கறேன். வரட்டுமா?''

வரதன் முகத்தில் ஈயாடவில்லை!

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி, தோல்விக்கோ, இதர பிரச்னைகளுக்கோ கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்காது.)

## கட்டுமான இன்ஜினீயர்

**ஸி**வில் இன்ஜினியராகிய நான், ஒரு சிறிய நிறுவனம் தொடங்கியுள்ளேன். நிர்வாகம், கணக்குகளைக் கவனிப்பது போன்றவற்றுக்கு நண்பர்களைப் பங்கு கொள்ளச் செய்துள்ளேன். மத்திய அரசின் எஃகு ஆலை உள்பட பல கட்டுமான வேலைகளைப் பெற்றுள்ளோம். இவ்வாறு வாய்ப்புக்கள் கூடும் நேரத்தில் நிதிப் பற்றாக்குறை ஏற்படுகிறது. எனவே முதலீடு செய்யவோ, கடன் தந்து உதவவோ விருப்பமுள்ளவர்களை உறுதி கூறி வரவேற்கிறேன்.

- எஸ். ராஜேந்திரன்,
5, ஏரிக்கரை தெரு,
ஆதம்பாக்கம்,
சென்னை - 600 088



# பாலம்

## வசந்த கோகிலம் இசை இருக்கிறதா?

**மி**கப் பழைய 78 RPM கர்நாடக இசைத் தட்டுக்களை ஒலி நாடாவில் பதிவு செய்து வைத்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். வி. வி. சடகோபன், வசந்த கோகிலம், பி. ஏ. பெரியநாயகி முதலியோரது இசைத் தட்டுக்கள் வைத்திருப்பவர் தொடர்பு கொண்டால் நேரில் சென்று பதிவு செய்து கொள்வேன்.

- வி. கணபதி சுப்பிரமணியன்,
C-92, இரண்டாவது குறுக்குத் தெரு,
மகராஜ நகர்,
திருநெல்வேலி - 627 011.

## ஆடியோ - வீடியோ ஆர்வம்

**எம்.** ஏ., பி.காம்., பட்டங்கள் பெற்றுள்ள நான், சிறுகதை, நாடகம், கவிதை, விளம்பர வாசகம் மற்றும் பேச்சுப் போட்டிகளில் பல பரிசுகளை வென்று தமிழ் நாளிதழ் நிருபராகவும் பணியாற்றியுள்ளேன். ஆடியோ - வீடியோ பப்ளிசிடி, இதர மக்கள் தொடர்புப் பணிகளில் என்னைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புவோருடன் தொடர்பு கொள்ள ஆசை.

- மெய்யப்பா அருணாசலம்,
3/50 இலுப்பக்குடியார் தெரு,
கோனா பட்டு,
புதுக்கோட்டை (மாவ) - 622 503.

## வியாபார நுணுக்கம் அறிய...

**வி**யாபார நுணுக்கங்கள் நன்கு அறிந்தவர் எனக்குக் குருவாக அமைந்தால் மிகவும் சந்தோஷப்படுவேன். எந்தவித வியாபாரமாயினும் வியாபார அன்பருக்கு உதவுவதன் மூலம் நாலும் வியாபார விஷயங்களை அறிந்து கொள்ள முடியும் அல்லவா? ஒரு சந்தர்ப்பம் அளித்தால் பேருதவியாக இருப்பேன்.

- நா. ராமச்சந்திரன்,
110, ஒத்தவாடை தெரு,
கோடம்பாக்கம்,
சென்னை - 600 024.

## பத்தாயிரம் சிறுகதைகள்!

**ப**ல்வேறு தமிழ் இதழ்களில் 1980 முதல் 1990 வரை வெளியான பத்தாயிரத்துக்கு மேலான சிறுகதைகளைத் தொகுத்து வைத்துள்ளேன். சிறுகதை ஆய்வில் ஈடுபடும் ஆராய்ச்சியாளர்கள் தொடர்பு கொள்ளலாம்.

- திருமதி. ஆர். மரகதம்,
19-B திருச்சி ரோடு,
சூலூர் - 641 402.

## நாளிதழ்களைக் கத்திரித்து...

**நா**ற்பது வருஷங்களுக்கு முன் வெளியான மித்திரன் - தினமணி பத்திரிகைகளிலிருந்து அரசியல் தலைவர்கள், கோயில்கள் பற்றிய வரலாறுகள் Paper cutting ஆக சேகரித்து வைத்துள்ளேன். கடிகார ரிப்பேர் செய்து வந்தவன் ஆதலால் பழங்கால கடிகாரங்களின் Spare parts உள்ளன. தேவைப்பட்டோர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

- எஸ். குருசாமி,
நம்மாழ்வார் தெரு,
ராதா நகர்,
குரோம்பேட்டை,
சென்னை - 600 044.



லாததால் என்போன்ற பாராளுமன்ற உறுப்பினர்களின் பொறுப்பு அதிகம் ஆகிறது. வடசென்னைத் தொகுதியில் கிட்டத்தட்ட 16 லட்சம் மக்கள் வசிக்கிறார்கள். இவர்கள் நகரப் பகுதிகளில் மட்டுமல்லாமல், அம்பத்தூர், ஆவடி, ரெட்ஹில்ஸ், போரூர் போன்ற பஞ்சாயத்து, நகரியங்களுக்கு உட்பட்ட பகுதிகளிலும் வாழ்கிறார்கள். என் கையில் கொடுக்கப்படும் ஆயிரக் கணக்கான மனுக்கள், சாக்கடை வசதி, குடிநீர் வசதி, தெருவிளக்கு ஆகியவை பற்றித் தான் இருக்கின்றன. பாராளுமன்றத்தில் "தொழில் கொள்கையைப் பற்றிப் பேசுங்கள், பொருளாதாரக் கொள்கையைப் பற்றிப் பேசுங்கள்" என்று இதுவரை என்னிடம் யாரும் மனு கொடுத்ததில்லை. எனக்கு வரும் புகார்களை உடனே

# "புகார் எழுதிச் சலித்துப்போய் விட்டேன்!"

வடசென்னையிலிருந்து இரண்டாவது முறையாகப் பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள, ஐக்கிய கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தா. பாண்டியன், பொது மக்களின் பல்வேறு கோரிக்கைகளுக்காக, மாநில அரசு மற்றும் பல்வேறு நிர்வாகங்களுடன் முட்டி மோதிய அனுபவங்களைப் பகிர்ந்து கொள்கிறார்...

**செ**ன்னை மாநகராட்சிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகள் இல்

சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு அனுப்பி விடுகிறேன். ஆனால், இதுவரை பதிலாக மூன்றே கடிதங்கள்தான் எனக்கு அதிகாரிகளிடமிருந்து வந்திருக்கின்றன. இவர்களுக்குப் புகார் எழுதி எழுதி எனக்குச் சலித்து விட்டது.

பதினெட்டு வருடங்களாகக் கார்ப்பரேஷன் தேர்தல் இல்லை. நகர நிர்வாகத்தை தட்டிக் கேட்பது யார்? அ.தி.மு.க. ஆட்சிக்கு என் பணிவான வேண்டுகோள், 'உடனே மாநகராட்சித் தேர்தலை நடத்துங்கள்' என்பதுதான்.

மேலும், குடிநீர், சாக்கடை எல்லாம் மாநகராட்சியிடமிருந்து பிரிக்கப்பட்டு, தனித்தனி நிர்வாகத்தில் இருக்கின்றன. இதனால் ஏற்படும் தொல்லைகள் கணக்கிலடங்காதவை. எனவே, எல்லாருக்கும் மேலாக, இணைந்து செயல்பட, சகல அதிகாரமும் படைத்த ஓர் அமைப்பு தேவை. இந்த அமைப்பு, கார்ப்பரேஷன், மெட்ரோ நிர்வாகம், குடிசை மாற்று வாரியம், எம். எம். டி. ஏ. போன்று பல ஏஜென்ஸிகளின் செயல்பாட்டை ஒருங்கிணைத்து, நகர வளர்ச்சிக்கு நல்ல பல சேவைகளைச் செய்ய முடியும்.

மற்றொன்று. இப்போது எம். எம்.

டி. ஏ. காரர்கள் ஏரிக்குள் லே-அவுட் போட்டாலும் அங்கீகரித்து விடுகிறார்கள். இதனால் மழைக் காலத்தில் வெள்ளம். இதையெல்லாம் தடுக்க வேண்டும். சமீபத்தில் வீட்டு வசதி வாரியம், அம்பத்தூர் ஏரியில் நிலத்தைக் கையகப்படுத்தி இருக்கிறது. நமது நகரத்தில் மழை நீரைச் சேமித்து வைக்கும் ஏரிகள் மிகவும் குறைந்து போனதால் நிறைய மழை பெய்யும் சமயங்களில், நீர் வீணாகக் கடலில் போய்ச் சேருகிறது. இருக்கும் ஏரிகளில் வீடுகளைக் கட்ட அனுமதிக்காமல், நன்றாகப் பராமரிக்க வேண்டும்.

**ரா**யபுரம் பகுதியில் போக்குவரத்து நெருக்கடிக்கு முக்கிய காரணம் பழைய குறுகிய பாலம்தான். மத்திய அரசுடன் நான் தொடர்ந்து போராடிய பிறகு, பதின்மூன்றரைக் கோடி ரூபாயில் மேம்பாலம் கட்டத் திட்டம் தயாராகி விட்டது. இதற்கு ரயில்வே, மாநில அரசு, துறைமுக நிர்வாகம் மூன்றும் ஒத்துழைப்புக் கொடுத்தால்தான் சீக்கிரம் கட்ட முடியும். ரயில்வே நிர்வாகம் தனது பங்கான சுமார் ஆறு கோடி ரூபாயைத் தயாராக வைத்திருக்கிறது. துறைமுக நிர்வாகமும் தயார். ஆனால், மாநில அரசு கடந்த இரண்டு வருடங்களாகத் தனது நிதிப் பங்கைச் செலுத்தாமல் காலம் கடத்துகிறது. நான் முதலமைச்சர் உட்பட பலரிடம் மோதிப் பார்த்து விட்டேன். இந்த நிதி ஆண்டில், மாநில அரசு, நிதி ஒதுக்காமல் இருந்தால், ரயில்வே நிர்வாகம், தயாராக இருக்கும் தனது பங்கை வேறு திட்டங்களுக்கு ஒதுக்கி விடப் போவதாகப் பயமுறுத்திக் கொண்டிருக்கிறது. மாநில அரசு என்ன செய்யப் போகிறது?

**என்** தொகுதியில் உள்ள தண்டையார்பேட்டைப் பாலம் கடந்த ஏழு வருடங்களாக முடிக்கப்படாமல் இருக்கிறது. இதற்காகவும் நான் முட்டி மோதிச் சலித்து விட்டேன். ரயில்வே நிர்வாகம், இருப்புப் பாதையின் மேல், தான் போட வேண்டிய பகுதியைப் போட்டு விட்டது. ஆனால் இணைப்புப் பகுதியைப் போட வேண்டிய மாநில அரசு இழு இழு என்று இழுக்கிறது. இதன் விளைவாக கொருக்குப் பேட்டைப் பகுதியில் உள்ள, ஏகப்பட்ட குடிசைப் பகுதிகளில், தீப் பிடித்தவுடன் வண்ணாரப் பேட்டையில் இருந்து தீ அணைப்பு வண்டிகள் சுற்றி வளைத்துக் கொண்டு போக வேண்டியிருக்கிறது. அதற்குள் தீ பரவி, ஏராளமான குடிசைகள் நாசமாகிப் போகின்றன. கடந்த மூன்றாண்டுகளில் பதின்மூன்று முறை கொருக்குப்பேட்டைப் பகுதியில் தீப் பிடித்து இருக்கிறது.

**என்** பகுதியில் உள்ள வீட்டு வசதி வாரியக் குடியிருப்புக்களில் பல நலச் சங்கங்கள் இருக்கின்றன. ஆனால் இங்கே பிரச்னை என்னவென்றால், தெரு விளக்குகள், ரோடுகள் சரியாகப் பராமரிக்கப்படுவதில்லை. கார்ப்பரேஷன்காரர்களைக் கேட்டால், ''வீட்டு வசதி வாரியம் இன்னமும் எங்களுக்கு அந்தப் பகுதியை ஒப்படைக்கவில்லை'' என்று சொல்வார்கள். வீட்டு வசதி வாரியமோ, ''எப்போதோ ஒப்படைத்து விட்டோமே'' என்று பதில் சொல்லும். பாதிக்கப்படுவது பொது ஜனம்தான். அம்பத்தூர் பகுதியில், குடியிருப்பவர்கள் சுமார் எட்டு லட்சம் ரூபாயை நகரியத்திடம் டெபாஸிட் செய்து, தெருவிளக்கு, சாலை வசதிகளைப் பராமரிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். நகரியம் அந்த ரூபாயை வாங்கிக் கொண்டு, கிணற்றில் போட்ட கல்லாக இருக்கிறது.

இப்படியே சொல்லிக் கொண்டே போகலாம். இத்தகைய நிலையே நீடித்துக் கொண்டு போனால் மக்களின் பொறுமை சோதிக்கப்படும்.

பேட்டி : பி. எஸ்.
படம் : ராஜன்





# ஸ்டான்லி மருத்துவமனை:

# குறைகளை வெல்லும் பெருமைகள்!

துண்டித்து விழும் கையையோ, விரலையோ உடனே ஐஸில் வைத்துப் பாதுகாப்பாக எடுத்துச் சென்றால், 12 மணி நேர அறுவைச் சிகிச்சை செய்து திரும்பப் பொருத்திவிடும் வசதி வாய்ந்தது ஸ்டான்லி மருத்துவமனை.

மயக்க மருந்துத் துறைத் தலைமை மருத்துவர் டி. சீனிவாசனின் பெருமுயற்சியால் உருவான ஏழு மாடி 'சர்ஜிகல் பிளாக்'இல், ஆபரேஷன் செய்தபடியே, அதை குளோஸ்ட் சர்க்யூட் டெலிவிஷனில் மருத்துவக் கல்வி பயிலும் மாணவர்கள் பார்த்துக் கொண்டே இருக்க, மருத்துவப் பேராசிரியர் விளக்கமாகப் பாடம் எடுக்கவும் வசதியுள்ளது.

இத்தகைய புகழ்பெற்ற மருத்துவமனையில்தான் தாங்கள் அரசாங்கப் பணியாளர்கள் என்ற உணர்வு இன்றி, நோயாளிகளிடம் மோசமாக நடந்து கொள்ளுகிறார்கள் சில கம்பவுண்டர்களும், மருத்துவர்களும் என்ற செய்தி வருத்தத்தைத்தான்

● விரைவில் துவங்கப்படவிருக்கும் குழந்தைகள் மருத்துவமனை...

அளித்தது. ''எல்லா இடங்களிலும் இப்படிப்பட்ட ஒருசிலர் இருக்கத்தான் இருப்பார்கள். அதை வைத்து ஒட்டுமொத்தமாக ஒரு பெரிய மருத்துவமனையின் மீது பழி சுமத்துவது நியாயமல்ல!'' என்றார் ஒரு மருத்துவர்.

''குறைகள் களையப்பட்டு வருகின்றன!'' என்றார் வெளியே சந்தித்த இன்னொரு மருத்துவர்.

டாக்டர் நாராயணன் தயவு தாட்சண்யம் பார்க்காமல், நேர்மையோடு இயங்கும் டீன் என்றும், ஸ்டான்லி மருத்துவமனைக்குத் தேவையானவற்றை மளமளவென்று பெற்றுத் தரும் ஆற்றல் மிக்கவர் என்றும் பல ஆண்டுகளாக அங்கு பணிபுரிபவர் சொன்னார்.

தமிழில் விஞ்ஞான நூல்களும், மருத்துவ நூல்களும் வர வேண்டும் என்று சமீபத்தில் அமைச்சர் இராம. வீரப்பன் ஒரு மேடையில் சொன்னது இங்கே ஏற்கெனவே நிறைவேற்றப்பட்டு விட்டது. இ. ரா. நாராயணன் தாம் எழுதிய இரண்டு புத்தகங்களை நம்மிடம் அளித்த போது வியப்பாய் இருந்தது. ஒன்று, ''சிறுநீரும் அதன் பரிசோதனை முறைகளும்''. இன்னொன்று, ''இரத்தம், இரத்தணுக்களின் விளக்கம் மற்றும் பரிசோதனை முறைகள்.'' இரண்டுமே மருத்துவமனை ஊழியர்கள் தவிர, சாதாரண மக்களும் படித்தறிந்து பயன்பெற உதவுகிறவை. தெளிவான நடையில், விளங்கும்படி எழுதப்பட்டுள்ளன.

ஸ்டான்லி மருத்துவமனைக்கு நேர் எதிரே புத்தம் புதிய கட்டடம் ஒன்று கட்டி முடிக்கப்பட்டிருக்கிறது. இது குழந்தைகள் மருத்துவமனை.

''290 படுக்கைகள் கொண்ட நவீன மருத்துவமனையாக இது முடிவில் இருக்கும். அமைச்சர் முத்துசாமி, இரண்டே மாதங்களில் இது ஆரம்பிக்கப்பட வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். அதனால் 150 படுக்கை வசதிகளை உடனே - அதாவது மார்ச் மாதத்திலேயே - ஆரம்பிக்க இருக்கிறோம். புறநோயாளிகள் பிரிவில் 1000-1500 குழந்தைகள் சிகிச்சை பெற முடியும்!'' என்று கூறினார் ஸ்டான்லி டீன் டாக்டர் வி. பி. நாராயணன்.

- நமது நிருபர்

படம் : ராஜன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால்: ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka